# பதிப்புரை

நாடு நல்ல நிலையை எய்த அந்நாட்டின் பண்டைய வரலாறுகள் செவ்வையாக மாணவர்களுக்கும் பெரு மக்களுக்கும் தெரிந்திருக்க வேண்டும். அவ்வரலாறும் அடிப்படை மெய்ச்சான்றுகளுடன் அமைந்திருக்க வேண்டும். அவ்வரலாறும் நடுநிலை பிறழா ஆசிரியர் களால் ஆக்கப்பட்டிருத்தல் வேண்டும். அதுவும் எளிய இனிய செவ்விய நடையில் தாய்மொழியாம் செந் தமிழ் மொழியில் பொருந்தி யிருப்பது இன்றியமை யாதது.

கற்போர்க்கு நல்லுணர்ச்சியை நல்குவதாகவும், அறமும் முறையும் பொருளும் வளனும் கடைக்கூட் டற்கு அருந்துணை செய்வதாகவும் அமைந்திருக்க வேண்டும். அத்துடன் அந்நாட்டுப் பண்டைய அரும் பெரும் புலவர் அருளிய தெய்வப் பாக்களைப் பயின்று பயன் பெறுவதற்கு வழிகாட்டுவதாகவும் அமைந் திருக்க வேண்டும்.

இவையெல்லாம் ஒருங்கமைந்து நாடக முறையில் நடித்துக் காட்டி நல்லோர் பலராலும் பாராட்டப் பெற்றதாகும் '**வள்ளலும் வளவனும்**' என்னும் இந் நூல். 'கண்டீரக்கோப் பெருநள்ளி' என்ற வள்ளலின் வரலாறும், 'சோழன் கரிகால் வளவன்' என்ற வளவ னின் வரலாறுங் கொண்டமையால் இந்நூற்கு '**வள் ளலும், வளவனும்**' எனப் பெயர்பெறுவதாயிற்று.

ஆசிரியர் திரு. சிவ. குப்புசாமிப்பிள்ளையவர்களுக்கு எங்கள் நன்றியுரியதாகுக. ஆசிரியர்களும் மாணாக்கர் களும், பொதுமக்களும் இந்நூலை வரவேற்பார்கள் என நம்புகின்றோம்.

**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.**

# முன்னுரை

நிலவளம் நீர்வளம் மிக்கு, மக்கட்பண்பும் மன்னர் ஆட்சியும் நாகரிகமும் சிறந்து, தொன்று தொட்டு இன்று காறும் நின்று நிலவுவது தமிழ்நாடு ஒன்றேயாம். அந் நாட்டகத்து நெடுநிலம் ஆளும் முடியுடை வேந்தரும், குறு நிலம் ஆளும் மன்னரும், முடியுடை வேந்தருக்கு மகட் கொடை நல்கும் வேளிரும், பிறரும் வாழ்ந்து வந்தனர். இவர்கள் வரலாறுகள் வரன்முறை தவிராது செம்மை யாகக் கோத்து எழுதிவைக்கப்படவில்லை.

நம் முன்னோர், வரலாறுகளையும் அவற்றிற்குரிய காலங்களையும் குறிக்கொண்டு பேணினால்லர். அவர் களின் ஒரே நோக்கம் நாட்டில் நல்லனபலவும், என்றும் ஆற்றொழுக்குப்போல் நிகழ்ந்து கொண்டிருக்க வேண்டு மென்பதே. எனினும், பல கல்வெட்டுக்களால் சில வர லாற்றுக்குறிப்புக்கள் காணப்படுகின்றன. அவை போது மான அளவுக்குக் கிடைத்தில.

பொய்யா நாவின் மேலோராகிய செந்தமிழ் நல்லி சைப் புலவர்கள், வேந்தரும் மன்னரும் வேளிரும் ஏனைப் புரவலரும் தமக்கும் பிறர்க்கும் வரையாது வழங்கிப் படை மடம் படா அவர்கள் கொடைமடம் பட்ட மலைநிகர் மாண்பைச் செய்ந்நன்றி அறிகுறியாகச் செந்தமிழ்ப் பாவால் பாடியுள்ளார்கள். அப் பாக்கள் சங்கத் தொகை நூற்கண் அமைந்துள்ளன. அவைகளே நம்முன்னோர் களின் வரலாற்றுக் கருவூலங்களாகும். அந் நூல்கள்

எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினெண் கீழ்க்கணக்கு என வரையறுத்துள்ளனர்.

இந் நூல்களையும் கல்வெட்டுக்களையும் பிறநாட்டு நல்லறிஞர் நம் நாட்டு வளங்காண வந்து எழுதி வைத்துள்ள குறிப்புக்களையும் அடிப்படையாகக் கொண்டு தமிழ் நாட்டு மெய்வரலாறு தக்காரால் ஆக்கியமைக்கப் பெறுதல்வேண்டும்.

அம்முறையில், இச்சிறு நாடக நூற்கண் குறுநில மன்னன் 'கண்டீரக்கோப் பெருநள்ளி', முடியுடை வேந்தன் 'கரிகால் பெருவளத்தான்' இருவர் வரலாறுகளும் செவ்விய முறையில் அமைக்கப் பெற்றிருக்கின்றன. கற்போர்க்கு இயல் இசையினும் சிறந்ததாக நாடகநூல்கள் காணப் பெறும். ஏனென்றால், நாடகம் பல உறுப்பினர்களைக் கொண்டதாய் இயலும் காட்சியும் பல அமைத்து அவ்வவற்றிற்கேற்ப இயல் இசை கூத்துகளுடன் கூற்றும் மாற்றமும் பொருந்தப் பண்டு நிகழ்ந்த வரலாற்றை இன்று நேரில் கண்டுகளிக்கச் செய்யும் நலம வாய்ந்தமையால்.

கண்டீரக்கோப் பெருநள்ளி பாண்டி வளநாட்டின் ஒருசார் அமைந்த தோட்டிமலைக்குரிய குறுநில மன்னன்; அவன், ஆண்மையும் அன்பும் ஈகையும் பண்பும் இயைந்தவன்; கைம்மாறு வேண்டாக் கடப்பாட்டாளன்; போர் வன்மை குன்றாப் பொற்பினன். போர்முனையில் பிறர் நலம் பேணித் தம் நலம் இழந்து, நாட்டின் உரிமை வீட்டினும் சிறந்ததெனக் கொண்டு, உயிர் கொடுத்துப் புகழும் வென்றியும் ஒருங்குகொண்ட மறமள்ளர்க்கு நடுகல் நட்டு அவர்தம் பெயரும் பீடும் படையும் பொறித்து அவரைத் தெய்வமாக வழிபட்டுவருதல் தொன்றுதொட்டுள்ள மரபு. இதனை ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியரும்

'காட்சி கால்கோள் நீர்ப்படை நடுகல்
சீர்த்தகு சிறப்பிற் பெரும்படை வாழ்த்தலென்று
இருமூன்று வகையிற் கல்லொடு புணரச்
சொல்லப் பட்ட எழுமூன்று துறைத்தே"
(தொல். புறத்: ரு.)

என்றருளினர். திருவள்ளுவனாரும்,

"என்னைமுன் நில்லன்மின் தெவ்விர் பலரென்னை
முன்னின்று கல்நின் றவர்" (திருக்குறள்: எஎக.)

என்றருளினர்.

மேலும், ஒரு மூதின் மகள்(ஆண்மைமிக்க மறக்குடிப் பெண்—மறத்தி) தன் தமையன் கொழுநன் இருவரும் முறையே முதல்நாளும் மறுநாளும் போர்முனையிற் சென்று உயிர் கொடுத்துப் புகழ் கொண்டனர். மூன்றும் நாள் செருப்பறை கேட்டு விருப்புற்றுத் தன் ஒரே மகன் ஆண்டிளையன் ஆகிய அவனையும் வேல் கைக் கொடுத்துச் செருமுக நோக்கிச் செல்கென விடுத்தாள். அவனும் அம்மானும் அப்பனும் காட்டிய செந்நெறி பற்றித் தன் உயிர் நீத்துப் புகழ்பெற்றனன்.

அம் மறமகள் தன்னால் நாட்டுக்குச் செய்யவேண்டிய நற்கடமை நிறைவுற்றமையால் கணவனுடன் பிரியாவுலகெய்தப் பெரும்பிறிது(சாவு)ற்றனள். அந்நங்கையே 'வீரமா நங்கை பொன் மொழித்தேவி' என்று இங்குக் குறிக்கப் பெறுபவள். அவட்கும் நடுகல் நட்டு வழிபாடியற்றும் நலத்தகு செய்தி வரையப்பெற்றுளது.

பெருநள்ளி வன்பரணர் என்னும் புலவர் பெருமானுக்குக் காட்டிடைக் கண்டதும் முகனமர்ந்து இன்சொற் கூறி வேலையாட்கள் வரக் காலந் தாழ்க்குமென்று கண்டு தன் கையால் உணவமைத்து ஊட்டித் தெண்ணீர் பருகச் செய்து பணிந்தமொழியால், "காட்டு நாட்டேம்; பேரணி

கலன்களில்லை; இவற்றை அன்பு கூர்ந்து பெற்றுக்கொள்க" என்று மார்பின்கண் விளங்கிய முத்துமாலையும் கையின் கண் அமைந்த பொற்கடகமும் வழங்கி வழிபட்டு வழி விட்டனன்.

வன்பரணர் வருந்திக்கேட்டும் ஊரும் பேரும் உரையாளுயினன். அவர் வழிச்செல்வாரை வினவி ஊரும் பேரும் உணர்ந்து இச் செய்கைகளைச் செவ்வையாகப் பாடியுள்ளார். அப்பாட்டுப் புறநானூறு-நூற்றைம்பதாஞ் செய்யுளாகும். இதுவும் செம்மைபெற அமைக்கப் பெற்றிருக்கின்றது.

சோழநாட்டு முடியுடை வேந்தன் கரிகால் பெருவளத்தான்! மிக்க இளமையன். அவன் தந்தை உருவப் பஃறேர் இளஞ்சேட் சென்னி உறையூரைக் கோநகராகக் கொண்டு 'முறை செய்து காப்பாற்று மன்னனும் மக்களால் இறையென்று வைக்கப் பெற்றவன்.' அழுந்தூர் வேள் மகளை மணந்து கரிகால் பெருவளத்தானை ஈன்றனன். தன் அருந்தவ மகனுக்குத் திருமாவளவன் எனப் பெயரமைத்தனன். மைந்தனின் இளமைச் செவ்விமட்டும் நுகர்ந்து தான் விண்ணுடு புரக்கச் சென்றனன். திருமாவளவன் மிக்க இளமையனுகவிருந்தான்.

தாயமாக்கள் சூழ்ச்சி முறையால் உள்நாட்டுக் கலகத்தை எழுப்பி நாட்டைக் கைப்பற்றித் திருமாவளவனை நாட்டைவிட்டுத் துரத்திவிட்டனர். திருமாவளவனும் உறையூரினின்றும் அகன்று கருவூரையடைந்து உருக்கரந்து திரிந்தனன். தாயமாக்கள் கொடுங்கோலோச்சினர். பொதுமக்களும், பெருமக்களும் பெரிதும் துன்புற்றனர்.

கரிகால் பெருவளத்தானின் அம்மான் இரும்பிடர்த் தலையாரென்பவராவர். இவர் பெரும்புலமையும் அரசியல்

சூழ்ச்சியும் போராண்மையும் பேராண்மையும் உடையவர். இவரும் பெருமக்களும்கூடிக் கழுமலத்து யானையைக் கட்டவிழ்ப்பித்துவிட்டுக் கரிகால் பெருவளத்தானை அவ் யானை தானாகவே தூக்கித் தன் எருத்தத்திருத்திக் கொணரச் செய்தனர். இது கண்ட தாயமாக்கள் திருமாவளவனைச் சிறையிட்டனர்.

பின் சிறைக்குத் தீயிடவும் செய்தனர். இச் சூழ்ச்சியெல்லாமுணர்ந்த இரும்பிடர்த் தலையார் படைத்துணையுடன் சென்று மருகனாகிய கரிகால் வளவனை மீட்டுத் தாயமாக்களைச் சிறையிட்டனர். தீப்பிடித்த சிறையினின்றும் தப்பி வரும்போது கால் சிறிது கருகினமையால் கரிகால் வளவன் என்று பெயர்பெற்றனன்.

அம்மான் அருந்துணையால் அரசு கட்டில்—அரியணை (சிங்காசனம்) ஏறிய கரிகால் பெருவளத்தான் ஆண்மை மிக்கவனும் அறிவும் சூழ்ச்சியும் ஊக்கமும் ஆள்வினைத் திறனும் உடையவனுமப் படையினைப் பெருக்கித் தென்னாடு, மேல்நாடு, இலங்கை, வடநாடெல்லாம் வென்று தன் அடிப்படுத்தி, வடபெருங்கல்லாம் பனிமலை(இமயமலை)யில் தன் புலிக்கொடியைப் பொறித்து மீண்டனன். பனிமலை முதல் குமரிவரை தன் ஒரு குடைக்கீழ்வைத்து ஆண்டனன். முதியோர் இருவர் வழக்கை நரைமுடித்து உரை முடிவு காட்டி நடுத்தீர்த்தனன். காவிரியாற்றுக்குத் தன் கீழ்ப்பட்டுள்ள மன்னர்களைக் கொண்டு கரை எடுப்பித்தனன். ஆந்திரநாட்டு மன்னன் பிரதாபருத்திரன் தனக்கு மூன்று கண்ணிருப்பதால் செருக்குற்றுக் கரை எடாதிருந்தனன். அதனை உணர்ந்த கரிகால் வளவன் பிரதாப உருத்திரனின் படத்தைக் கொணர்வித்துக் கூர்ந்து நோக்கி நெற்றிக்கண் கண்டு வியந்து அக்கண்ணைப் படத்தகத்துப் போக்கினன். அஃது உண்மைப் பிரதாபருத்

திரன் உருவிலும் போயிற்று. இஃது கரிகால் வளவனின் உள உரத்தையும், செங்கோன் முறைமையையும், தெய்வ நாட்டத்தையும் குறிக்கும். கோநகரைக் காவிரிப்பூம் பட்டினத்திற்கு மாற்றிக் காலினும் கலத்தினும் வரும் வளம் பெருக்கித் தமிழ்நாட்டைத் தலைசிறக்கச் செய்தனன்.

பின் நாங்கூர் வேள்மகளைத் தமிழ் நன் முறையில் மணந்து முறைசெய்து நாடாண்டு பீடும் புகழும் எய்தி வீடுற்றனன். இவ்வரலாறும் செவ்விய முறையில் அமைக்கப் பெற்றுள்ளது. இவ்வரலாற்றுக்கு அடிப்படையாக நல் இசைப்புலவர் முடத்தாமக் கண்ணியார் அருளிய பத்துப்பாட்டினுள் இரண்டாவதாக அமைந்த பொருநராற்றுப்படையும், கடியலூர் உருத்திரங் கண்ணனார் அருளிய ஒன்பதாவதாக அமைந்த பட்டினப்பாலையும் அமைந்துள்ளன.

இவ்வரலாற்றால் மாணவர் இளமையிலேயே ஊக்கமும் உரனும், அறிவும் ஆண்மையும், உலகியலுணர்வும், கலங்காமையும் கைக்கொண்டொழுகின் கருதியது எளிதி லெய்துவர் என்பது விளங்கும்.

—ஆசிரியர்.

# க. கண்டீரக்கோப் பெருநள்ளி



## வரலாறு

செந்தமிழ் நிறை நீங்காப் புலவருளம் போன்ற பேரியாறும் வரிவண்டுகள் மொய்க்குந் தாமரைப் பொய்கையும் ஆம்பலுங் குவளையு மணக்கும் ஓடையும் கயலொடு கெளிறும் வராலொடு வாளையும் பயிலும் ஏரியும் செறிவுறப் பொருந்தி, விதைத்தன யாவும் விளைவுமிக்கூர வளம் பெறுதலால், மக்கள் கல்வியுஞ் செல்வமும் பெற்றுப் பகையும் பிணியுமின்றி, இசை பட வாழுதற்கிடனுய பாண்டிவளநாடு, கன்னித் தமிழைக் கவின்பெற வுயர்த்தி, புலவர் பொருளுரை போற்றி, செந்நெறிப் படரும் செல்வரை மிகுத்து, மன்னரனைவரும் மாண்புறு வாழ்க்கை நடாத்தற் கேற்ற திருவளர் செந்தமிழ் நாடாய்த் திகழ்ந்தது.

அந்நாட்டின் ஒருபால் தொல்குடிப்பிறந்தவனும் இரப்பவர் உவப்பன தரூஉம் ஈகையனும், கற்றுரை வழிபடும் கல்வி கேள்வியனும், மன்பதை காக்கும் மன்னனும், தோலா நெறி, தொடித்தோள்வன்மை, தாவில்சீர்த்தி இவை தன்பாலுடையனுய்த் தோட்டி மலை நாடாண்ட, வள்ளல்-கண்டீரக்கோப்பெருநள்ளி என்பா னொருவன் இருந்தான்.

அவன் நாடு, பரிசில் வேண்டிப் பல இடங்களுக் குஞ் செல்லும் புலவர், பாணர், கூத்தர் ஆய இவர்தம்

வினையிற் பலகால் தோன்றி அன்னவர்தம் வறுமை நோய் வாட்டும் வான் மருந்தாய் விளங்கும். மாற்றலர் தமக்கோ கொடியரைக் காயும் கூற்றுவன் நகரெனக் குழுறுறச் செய்யும். அவன்றன் இயல்புணராத அழுக்காறும் அவாவும் பெற்ற ஓர் அயன்மன்னன் தோட்டி வளத்தைப் பெறத் துணிவுபெற்று, தனது நாற்படையுங்கூட்டி நள்ளிமீது ஏவினான். காலனும் நடுங்கக் கடும்போர் புரியும் கண்டீரக்கோவோ இவற் கஞ்சுவான்? அயலவன் படைகள் யாவும் கல்முன் சிதறும் காக்கைகள் போல உய்வகையுணராது முதனாட் போரிலேயே முதுகிட்டோடின. நள்ளியும் வாகை சூடினன். அவனது திறலுணர்ந்த அனைவரும் அஞ்சினர். 'கொடைமடம் பெற்ற நள்ளி படை மடங் கொள்ளான்' என்ற சொல்லும் நாடெங்கும் பரவிற்று. நள்ளியும் வள்ளியோர் தலைவனாய் அவன் பாலுற்ற எவர்க்கும் வரையாது கொடுத்து, அற முறை வழுவாத இசை நிறீஇ, வாழ்ந்து வந்தான்.

இவன் செயலிவ்வாறாக, அமிழ்தினுமினிய நந்தமிழ் மொழியை ஐயந் திரிபு நீங்கக் கற்றுச் சோர்விலாச் சொல்வன்மையும், வேந்தர் மகிழும் பேரறிவுங் கூடியவராய புலவர் வன்பரணர், தம் மனைவி மக்களுடன் பரிசிலாளராய் வேற்றுநா டேகினர். ஆண்டு, அவர் கருத்து கைவரப் பெறாமையால், கொண்டு சென்ற பொருள் முழுதும் அழிந்து போக, பின் செய்வதுணராது திகைத்து வாடி, வறுமை நோயுற்றார். உடுத்த ஆடை ஒட்டுடன் ஒட்டைகள் பெற்று மாசுற்றிருக்க, இளைத்த யாக்கையும் ஒடுங்கிய வயிறும் பெற்றனர் புலவரும் சுற்றமும். வன்பரணர், தம் சுற்றஞ்சூழ நலிவுற்றகால்கள் தள்ளாட நடந்து, ஓர் இருண்ட கான்

அடைந்தார்; களைப்பு மிகுதியால் மேற்செல்ல வலியின் றிச் சோர்வுற்றுத் தம்மவருடன் ஆண்டிருந்த ஒரு பலாவின் நீழலிற் றங்கினார். பலாவின் நீழல் பசிக் குறு மருந்தாகுமோ? என் செய்வது இறைவனே புகலென எண்ணமிட்டு ஏங்கி யிருந்தார்.

அதுபோது நெடிய தோற்றமும் அகன்ற நெஞ் சும் இளமுறுவல் பூத்த முகமுங்கொண்டு இடையில் வாளும் கையில் வில்லும் இலங்க, கண்டவ ரஞ்சும் வேட்டுவக் கோலத்துடன் வன்பரணரிருந்த பலாவை நோக்கி, ஒருவன் மதர்த்த நடையுடன் அணுகினன். வேட்டுவனென வெருண்டு, புலவர் அவனைக் கும்பிட் டெழுந்தபோது, கையமர்த்தி யிருக்கச் செய்து அவ ரையும் அவர் தம் மனைவி மக்களையும் அன்புற நோக் கினான்; உணவின்றி அவர்கள் வாடிக்குழைவதையும் உணர்ந்தான்; தன்னுடன் போந்த பணியாளர் யாவ ரும் வழிதப்பிப் போயினமையால், அவன்றன் களைப் பினையுங் கருதாது, தீக்கடை கோலால் அனல்மூட்டி, வேட்டையிற் பெற்ற விலங்கின் இறைச்சியை வாட் டித்தந்து, வன்பரணரும் பிறரும் அதனை விழைவுடன் உண்ணச் செய்தான். அமிழ்து போலவுண்டு கடும்பசி யாறிய வன்பரணர், தம் உறவினருடன் அண்மையி லோடிய மலைவீழருவி ஒன்றின் குளிர்ந்த நீரைப் பருகிக் களைப்பு நீங்கப்பெற்றார்.

பிறகு வன்பரணர் வலியவந் துயிரளித்த வள் ளன்மையுடையான்பால் விடைபெறக் கருதி முயன்ற போது, அவன் புலவரிடம் 'நான் இதுபோது காட்ட கத் துள்ளேனாகலின், தங்கட்கு விரைவில் தருதற் குற்ற உயரிய பணிகள் வேறொன்று மில்லேன்;

இவற்றை அன்புடன் கொண்டு மகிழ்க' என இனிமை பயக்கப் பேசி, தன் மார்பி லணிந்திருந்த முத்து மாலையையும் கையிலணிந்துள்ள கடகத்தையும் கழற் றிக் கொடுத்தான். என்னே, அவன்றன் கொடைத் திறன்!

பணிகளைப் பெற்று இறும்பூதும் மகிழ்ச்சியுங் கொண்ட புலவர் பெருமான், கொடுத்தவன் யாவ னென அறியமுயன்றன ராயினும், பெயரும் புகலாது ஊரும் உரையாது, புன்னகை எழுப்பி, விரைவினிற் போயினன் அவன்.

புலவர் வந்தவன் யாவனென வுணரக் கூடாமை யாற் கவன்று, வழிவந்தார் யாவரிடமுங் கேட்டு, அவன் "கண்டீரக்கோப் பெருநள்ளி" என்னும் மலை நாட்டு மன்னனே யாவன் என அறிந்து மகிழ்ந்து, அவனது கொடை மேம்பாட்டினையும் உயர்ந்த பண் பினையும் புகழ்ந்து பாடி, அவனைச் சிறப்பித்தார். நள்ளியும், கற்றூர் கொண்டாடப் பெரும்புகழ் பரப்பி, தலைமை பெற்ற கொடையாளருள் முதல்வனாகத் திகழ்ந்து வாழ்ந்திருந்தான்.

---

# இயல் - க

## காட்சி க

உறுப்பினர் :—திருக்கூத்தன், பூங்குன்றன், வீரமா தேவன், துணைவர்கள்.

இடம் :—தோட்டிமலைப் புறநகர்.

காலம் :—மாலைப்போது.

[முருகப்பெருமான் திருமுன்னர், தோட்டிமலை நாட்டவர் தம் தலைவனின் வெற்றிநாடி வழிபடுதல்.]

**திருக்கூத்தன் :**—உலகமுய்ய ஒளியுறு பொருளே! மேலவருளத்தின் நிறைவே! நின் பேரருட்டிறனை யாவரே அறிவர். வறிஞன் வானிதியனாகவும், மடையன் மாமதியனாகவும், மண்ணகத்தான் விண்ணகத்தானாகவும் அமைக்க வல்லநீ, உயர் குடியிற் பிறந்து நல்ல தகுதிகள் பெற்ற எம் வேந்தர் பெருமான் நள்ளியைப் போன்றார், நல்வாழ்வின்றித் தாழ்வுற்றுத் துன்பத்தால் தவிக்க ஏனோ விரும்புகின்றாய்? நினது செயல்வலிமையை உள்ளவாறுணர்வாரைக்கூட அறிய வியலாத எளியேன் அதனைப் பற்றிக் கருதுவதா லாவதென்?

**பூங்குன்றன் :**—(மலர் தொடுக்கும் கைகளுடன்) பெரும! மக்களாலாவது ஒன்றுமின்றுதான். 'ஆண்டவனே! எம்மிறைவன் எத்தகைய இடர்ப்பாடுமின்றி வாழ்வானாக!' என, நாம் நம் முருகப்பெருமான் திருமுன்னிருந்து உளமாரப்பணிந்து தொழலாமேயன்றிப் பிறிதொன்றும் இயற்றக்கூடுமென எற்குத் தோன்றிற்றிலது.

**திருக்கூத்தன்** ;—பூங்குன்ற ! நன்று நின் பேச்சு ! நம் வேந்து பகைவரால் அச்சுறுத்தப்படும்போது நாம் நமது தொழிலையோடு நின்றாற் போதுமோ? 'நான்முந்தி, நீமுந்தி,' என்று மார்புதட்டி மடிகட்டிப் போர்க்களஞ் சென்று போர்ப்படை தாங்கிக் கடும் போர் புரியவேண்டாவோ ? நான் யாண்டு முதிரப் பெற்றவன் ; நீயோ மிக்க இளைஞன். எனினும் வலிமையும் உளத்திட்பமும் கொண்டவன்; அச்சங் கொள்ளாது கருதுவனவற்றைத் திறம்பட முடிக்கும் பெற்றியனும் ஆவாய் ; ஆதலால் என்னைப் போல நீ 'தொழிலாம்' எனக் கொள்ளாது உன் உடலால் என்னென்ன செய்ய இயலுமோ அவை யனைத்தும் தவறாது செய்து நம் நாட்டவர் வாழத் தொண்டு செய்வாயாக.

**பூங்குன்றன்** : பெரும ! நான் தங்களது கருத்துக்கு மாறுநிற்பவன் அல்லன். 'நாடு நலமுற நீ போர் தொடு' என்றால், என் உள்ளம் எல்லையில் இன்ப வாரிதியில் திளைக்கும். நான் ஒரு தமிழன் ; மறக்குடியிற் பிறந்தவன் ; எனது வயிற்றின் பொருட்டு இந் நாட்டைக் காட்டிக்கொடுப்பவன் அல்லன் ; தம் பெண்டுபிள்ளைகள் வாழ்வினைப் போற்றிப் பிறருக்குத் துன்பமாகித்திரியும் நடைப்பிணமும் அல்லேன். இந்நாட்டவரின் உரிமைக்காக எனது சிறிய உயிரையும் வழங்குநிலை வரினும், அதற்கும் பின் வாங்கேன் என, இம் முருகவேள் திருமுன் உறுதி கூறுகின்றேன்.

**திருக்கூத்தன்** : பூங்குன்ற ! உனது தன்னலமில்லாத் தொண்டின் உறுதியினைக் கேட்டு மகிழ்கின்றேன்.

நீ எல்லா நலன்களும் இனிதே பெற்று மழவர் தலைவனாய் வாழ்க! நின் உள்ளக்கருத்தை யுணர்தற் பொருட்டே யான் இவ்வாறு கேட்டேன். கவலற்க........இன்று நம் நாட்டுப் பெருமக்கள் இவண் எழுந்தருளி நம் முருகப்பெருமான் திருமுன் வழிபட்டு நம் மன்னர் பெருமான் நள்ளியின் பகைவரைப் போரில் வெற்றிகொள்ளும் வகையினை ஆய்ந்து முடிவுசெய்யப் போகின்றனர் ஆதலால் நீயும் அவர்களுடனிருந்து நமது நாட்டின் உரிமைப் போரில் ஒரு பங்குகொண்டு தொண்டுபுரிக. அவர்களும் ஈண்டு வருதற்குற்ற பொழுதும் அணுகுகின்றது. வழிபாட்டிற்குரிய யாவும் விரைவில் திட்டம் செய்க.

**பூங்குன்றன் :** பெரும! அவ்வாறே செய்கின்றேன். (சற்று செவிமடுத்து) அதோ! அவர்களும் வருவதுபோற் காணப்படுகின்றதே.

**திருக்கூத்தன் :** (யாவரும் அணுக, கைகூப்பி) வருக! வருக!! பெருமக்களே! யாவரும் வருக! முருகன் திருவருள் என்றும் நுமக்கு அமைவதாகுக (யாவரும் வணங்குதல்) நன்று! தலைவ! நம் வேந்தர் நள்ளி அண்ணல், இன்று கொண்டுள்ள முயற்சியின் திட்பம் எந்நிலையிலுளது?

**வீரமாதேவன் :** கூத்தப்பெரும! நம் அண்ணலின் அருளால் அவர் தொடங்கிய நம் உரிமைப்போர் வெற்றியையே தரும் எனக் கருதுகின்றேன். யாவற்றிற்கும் தங்கள் போன்றாரது நல்வாழ்த்தும் எம் போன்றாரது பணிவோடுள்ள கூட்டுறவு மிக்க தொண்டும் நம் ஆண்டவனின் திருவருட் பெருக்கின் வலிவுமே வேண்டற்பாலன.

**திருக்கூத்தன் :** யாவும் இனிதே வந்துறும் : கவலற்க. நம் முருகவேள், என்றும் நம்மைக் கைவிடான். அடியார்களுக்கு எளியவனவதன்றோ அவன் திறம் ; எத்துணையளவு துயர் அடுக்கிவரினும் ஒரு நொடிப் பொழுதில் அவை ஓலமிட்டோட அருளுப வன் அல்லனோ நம் அண்ணல்? அதன் பொருட்டும் நாம் அஞ்சவேண்டுவ தின்று. அவனருள் நமக் கென்றுமுண்டு.

**வீரமாதேவன் :** நன்று கூத்த! தங்கள் திருமொழிப் படியே யாவும் உண்டாகட்டும். இனிப் பொழுது போக்காது வழிபாட்டினைக் கருதுவோமாக.

**திருக்கூத்தன் :** நன்று! அவ்வாறே செய்வோம்........ பூங்குன்ற! யாவும் இவண் கொணர்க? (கூத்தரும் குன்றனும் வழிபாடியற்ற யாவரும் பணிதல்) அன்பர் களே! நாம் நம் இறைவனை நம் நாட்டின் நல் வாழ்வு கருதி வழிபட்டு வேண்டுவோமாக!

(பாடுதல்)

பூமலி தேவாநாட் டொருதேவும்
பூவினி லினிதுறை ஒருதேவும்
பானிறை யாழியி னொருதேவும்
பனிநெடு வரையமர் ஒருதேவும்
பேர்மிகு நின்னிசை விழைவோடும்
பேசிட உளமகிழ் நிறைவோடும்
வாச மலரணி திருமார்பா
வள்ளிதே வானைதம் பெருமானே.

(காட்சி முடிவு)

## காட்சி ௨

உறுப்பினர் :—தேவி - பொன்மொழி, தோழி - தேமொழி, காவலன்.

இடம் :—மறவர் நெடுந்தெருவில் ஓர் இல்லம்.

காலம் :—பிற்பகல்.

[முதல் நாட்போரில் மடிந்த தன் ஐ பொருட்டு வாடி நின்ற "வீரமாநங்கை - பொன்மொழித்தேவி" கணவன் போரில் மாண்ட செய்தி கேட்டுப் புலம்பல்.]

**தேமொழி :** நங்காய்! நீ மிக்க முகவாட்டமுற்றிருப்பதைக் காண, எனக்கு வருத்தமா யுளது. நீ அறியாதனவற்றை நான் உனக்குக் கூறப்போவதில்லை. நீ ஏனோ இவ்வாறு கவலைகொள்கின்றாய்? மண்ணிற் பிறந்தார் எவரும் ஒருநாள் திண்ணமாகச் சாவரல்லவோ? ஆண்டாண்டுதோறும் அழுது புலம்பினாலும் மாண்டார் எவரும் வருவரோ? நின்னை யொத்த வீரத் தமிழ்க்குடி நங்கை, போரில் இறந்த ஒருவற்காக உளம் நைதல் அழகாமா?

**பொன்மொழி:** தோழீ! கழிந்தன கருதி நான் கவலுறுதல் இல்லை; எனினும் இதுபோது என்னால் அடக்க முடியாதவாறு என் உள்ளம் துக்கத்தால் நிறைகின்றது. எவ்வளவுதான் நினைவு கூர்ந்தாலும் தாய் தந்தையர் முகத்தை அறியமுடியாதபடியுள்ள அத் துணைச் சிறுபருவத்திலேயே, நான் என் அருமை அன்னையையும் தந்தையையும் விழுங்கினேன். அந்த நாள் தொட்டு நெருநல் வரையும் எனது வாழ்வே தமது வாளின் குறிக்கோளாகக்கொண்டு மகிழ்ந்தவரன்றோ என் அருமைத் தமையன். எச் சிறு

*துயர் எனக்குவரினும் அல்லும் பகலும் எனக் கருகிலிருந்து, சீராட்டிப் பாராட்டி, தாயினும் மிக்க அன்புடன் புரந்தனரே! எனக்கு இத்தகைய தமையன் இனிக் கிடைப்பரோ? அந்தோ! என் அருமைத்தன்னையை எப்பிறப்பில் இனிக் காண்பேன்!*

**தேமொழி :** *தேவி! உன் தமையன் உன்னிடங்கொண்ட அன்பின் சிறப்பே, இதுபோது உனக்குப் பெருந் துக்கம் தருகின்றது. இனி அதைப்பற்றிச் சிறிதும் உளம்கொள்ளாதே. நம் வேந்தர்பெருமானின் முதற் படையின் முன்னணியில் நின்று, மாநிலம் புரக்க மாபோர் புரிந்த நின் தமையன், இதுபோது, மிகுந்த சிறப்புக்களோடு விண்ணவர் நங்கை விரும்பி வணங்க, வீரர் பொன்னுட்டில் வீறுடன் விளங்குகின்றார். அவர் பெற்றுள்ள இன்பம், இத்துன்பம் மலிந்த மாநிலத்தில் என்றும் கிட்டுதற்கரிது. ஆதலால் நின் தன்னையின் பிரிவை மறந்து, கவலையின்றி அவர் பெற்றிருக்கும் வீரப்பெருந் தகுதிக்கு மகிழ்க.*

**பொன்மொழி :**—*(பெருமூசசெறிந்து) மறக்கவே முயல்கின்றேன், என் நெஞ்சமே துயர் தருகின்றது. அமைதியையே விரும்புகின்றேன்; ஆயினும் ஏதேதோ பலப் பல எண்ணங்கள் தோன்றுகின்றனவே. உள்ளங் கொள்ளாத அச்சமும், உன்ன வியலாத தீ நிமித்தங்களும் என்பால் உறுகின்றனவே, தோழி! எனக்கு இன்னும் என்ன விளைவு வருமோ? அறியேன்?*

**தேமொழி :**—*அம்மே! இதுகாறும் துக்கம் இன்னதென அறியாது வளர்ந்த உனக்கு, தாயினும் சாலப்*

பரிந்து, நின்னைப் போற்றி வளர்த்த நின் அன்பு மிக்க அண்ணனின் பிரிவே இவ்வாறு துயர் மிகத் தருகின்றது. ஒன்றுக்கும் அஞ்சவேண்டா. உன் தமையன் முதியவர். மேலும் என்றைக்காயினும் இறப்பதற்கும் உரியவர். அவர் இன்று கிடைத்தற் கரிய வீரர் பொன்னுடு சேர்ந்தமை கருதி நீ மகிழ்ச்சியுற வேண்டாவோ? மன அமைதி கொள்க. அதோ பார்! நம் காவலன் மிக விரைந்து வருகின்றான். என்ன செய்தியோ? கண் கலங்காதே. அமைதியாக இருந்து அவனைக்கேட்டு அறிகுவம்.

[காவலன் அணுகிப் பணிதல்]

**காவலன்** :—(நா நடுங்க) அன்னாய்! தங்கள் தன்னை நெருநல் போர்முனையிலிருந்து விண்ணுடு சென்றவர் ......இன்று.......இன்று வந்து.......வந்து அழைத் தார்........அழைத்தார்.......அழைத்தார்.

**பொன்மொழி** :—ஏடா! காவல, செய்தியைக் கூறுது அழைத்தார், அழைத்தார்' என்று அடுக்கினால் என்னடா விளங்கும்? இறந்தவர் எப்படியடா அழைப்பார்?

**காவலன்** :—ஐயோ! நான் என்சொல்வேன். அவர் அழைக்க நம் ஐயாவும் (துக்கத்துடன் கூறல்) சென்றனர்.

**பொன்மொழி** :—ஆ அ அ அ! (உயிர்ப்பின்றிச் சாய, தோழி துயருடன் பணிசெய,) ஐயோ! கடவுளே! இனி நான் என் செய்வேன்? ஏ! காதல! எனக்குத் துணையாவார் இவ்வுலகில் இனி யாருளர்? பெற்றாரும், உற்றாரும், பெருந்திருவும், பேரின்பமு மாய நீ, என்னை இவ்வாறு ஏங்கவிட்டுத் தனியே

செல்லுதல் தகுதியோ? நீ கொண்ட வீர வாழ்வு இதுதானே? ஏ! தீவினைத் தெய்வமே! உனக்குக் கண்கள் இல்லையா? உணர்ச்சி கெட்டதோ? நேற்றுத்தானே, என் அருமைமிக்க அண்ணனின் உயிரைப் பற்றினாய். அத்துக்கம் ஓர் எள்ளளவு நீங்குமுன், அந்தோ! என் ஊழ்வலியே! என் பெறுதற்கரிய உணர்வினை, எனது உயிரினை இவ்வாறு கொள்ளை கொள்ளலாமா? ஆவியற்ற இவ்வுடல் இவ்வுலகில் எதற்குளது? என் தலைவா! என் கணவா! ஆ! இனி என் செய்வேன்? ஐயோ........

(பாடுதல்)

அன்னையின் பரிவோடு அந்நாளிந் நாள்வரையில்
பொன்போல் புரந்துவந்தாய், அண்ணா, அண்ணா
—என்னண்ணா
தன்னைப் பிரியமுன்னர் தன்நேரிலா எனது
பொன்னாவி கொண்டதே, தெய்வம்-தெய்வம்
—அத்தெய்வம்
உன்னையே பொருளாக உயிர்வாழ் வறிந்திருந்தும்
என்னைப்பிரிய வுளங், கொண்டீர்-கொண்டீர்
—என்கொண்டீர்
அன்றே என்கைப்பற்றி அனல்நீ முன் கொண்டமொழி
இன்றுநீ தவிர்வது, நன்றோ நன்றோ—இதுநன்றோ

ஏ! நாயக! நீயும் நானும் ஒத்தநலனும், குணமும், பிறவும் வாய்க்கப் பெற்றவர்கள் அல்லமோ? என்னிடம் எதுவும் கூறாது இவ்வாறு நீ சென்றால் நான் எங்குறுவேன்? என் நிலைமையை எவர்க் குரைப்பேன்? ஏ! தலைவா! என்னை இங்கு இருக்க விட்டு, நீ, தனியே நான் வாராத ஊருக்கு வழிக் கொள்ளுதல் முறையாமோ? நீயும் நானும் உளம்

பொருந்திய காதலமைந்த அறவாழ்வி லீடுபட வில்லையா? என்றேனும் எனது செயல் நின் கருத்துக்கு மாறாயதோ? யான் எச்சிறு தவறுஞ் செய்ததாகக்கூட நினைவில்லையே? என் காதல! அன்றொருநாள் என்னுடன் மகிழ்ந்திருந்தபோது, 'நின் கருத்துக்கேற்ப வொழுகு மியல்பினள் நின் துணைவி என, என் நண்பர்கள் புகழுகின்றனர்' என்று விம்மிதமுற நீ மொழிந்த சொற்களைக் கூடவா இன்று மறந்து என்னைவிட்டு ஏகினாய்? நன்று நின்செய்கை!

(பாடுதல்)

அறமே தவிர்ந்து முறைகேடு பெற்று
அழியாட்சி கொண்ட மன்னன்
மறவேல் நெடுங்கை மல்லார்ந்த தோளின்
மறவாண்மை யுற்றாய் நீயோ
திறலே மிகுந்த விறலோய் நீ பெற்ற
சிறுவன்றான் நாளும் நின்னை
'மறவேன் யான்' என்றால் மகனுக்கென்சொல்வன்
மறவா! நின் செல்கை யழகோ?

என் தலைவா! எனக்கினி இம்மண்மீது என்னுளது? யானும் இன்னே நின்னிடம் வருகின்றேன். என் நாயக! என்னை மறுக்காமற் போற்றியழைத்துக் கொள்க. இந் நிலவாழ்வு மிகக் கொடியது. ஆ! தெய்வமே! இதுவோ உன் நீதி!

[சோர்ந்து சாய்தல்]

(காட்சி முடிவு)

## காட்சி - ௩.

**உறுப்பினர் :**—ஆதிரை, வளவன், இளமதிவாணன்.

**இடம் :**—மறவர் நெடுந்தெரு.

**காலம் :**—காலைப்போது.

[வீரமா-நங்கையின் மகன் தன் நண்பன் வளவனுக்குப் போர்மறம் புகட்டல்.]

**ஆதிரை :**—(வாடி நிற்கும் வளவனிடம்) ஏடா! வளவ, நினது முகம் வாடி இருக்கிறது? உன் உடம்புக்கு ஏதேனும் ஊறுபாடு வந்ததோ? அவ்வாறாயின், என் அன்னையிடம் கூறி அதற்கு வேண்டுவன புரிவேன், விரைவிற் சொல்க.

**வளவன் :**—அக்கா! என் உடம்புக்கு எக்கேடும் இல்லை. நான் வளமாகத்தான் இருக்கின்றேன்.

**ஆதிரை :**—பின்னர் ஏன் வாட்டங் கொண்டுள்ளாய்? ஏதேனும் குறும்புகள் செய்து நின் தந்தையால் நையப் புடைக்கப்பட்டாயோ?

**வளவன் :**—அவ்வாறுமில்லை, போ. நான் ஏன் குறும்பு செய்கிறேன்.

**ஆதிரை :**—அஃதின்றெனில், ஏனோ இவ்வாறு அழுமுகங் கொண்டுள்ளாய்?

**வளவன் :**—நான் என்சொல்வேன் அக்கா! என் தந்தை இன்று விடிவதற்கு முன்னேயே போர்க்களஞ் சென்றார். நேற்றிரவு அவர் போருக்கு ஆயத்த மாகும்போது போர் நிகழ்ச்சி எவ்வாறிருக்கும் என்றேன். அதற்கு அவர் கூறிய மறுமொழியே என்னை மிகவும் அச்சுறுத்துகின்றது. ஆயிரம் ஆயிரமாக யானைகள் நிற்குமாம். மிகுந்த பரபரப்

புள்ள குதிரைகள் பதினுயிரக் கணக்கில் இருக்கு மாம். உயர்ந்த தேர்களும் நூற்றுக்கணக்கில் தோன்றுமாம். நூருயிரக்கணக்கில் வீரர்கள் வரிசை வரிசையாக ஆரவாரஞ்செய்து இருப்பார் களாம் எங்குப் பார்த்தாலும் வில்லும் அம்பும் வேலும் வாளும் ஒளிவீசுமாம்.

**ஆதிரை** :—(புன்னகையுடன்) நல்லபிள்ளை நீ! இதற் காகவா, அஞ்சி வாடினுய்? இவற்றைக் காண எவ்வளவு அழகாயிருக்கும் தெரியுமா?

**வளவன்** :—இதற்காகவா அஞ்சினேன்? நன்று சொன் ஞய். இவ்வாறு கூடியுள்ள தேர், யானை, குதிரை, வீரர் முதலிய படைகள் யாவும் மிக்க சினத்தோடும் சீற்றத்தோடும் போர்புரியத் தொடங்குமாம். எங்கும், 'வெட்டு,' 'குத்து,' 'அறு' 'தள்ளு' என்ற கூச்சலே நிரம்புமாம். தரைமீதுள்ள புழுதி, புகை போலப் பொடிபட்டு வானமெல்லாம் பறக்குமாம். யாருக்கு, எப்பொழுது என்ன வருமோ வென்று கூடத் தெரியாதாம். இன்னும், குருதி வெள்ளம் வாய்க்காலில் நீர் ஓடுவதுபோல யானை, குதிரை, மக்கள் இவர்கள் உடலிலிருந்து பீறிட்டுப் பாயு மாம். அப்போது போரில் வெட்டுண்டும் தலை போயும் குடல் சரிந்தும் கண்டவர் நடுங்க, வீறிட்டு அழுது மடிபவர்களின் ஒலி, கேட்பவர் நெஞ்சைத் திடுக்கிடச் செய்யுமாம். அத்தகைய போருக்கு என் தந்தை, 'நாளைப்போவேன்' என்றதும் என் நெஞ்சம் ஆழ்ந்த கவலையுள் நிறைந்தது, அக்கா!

**ஆதிரை** :—(பெருமிதத்துடன்) அடா, நடுக்கங்கொள் வாய்! ஒருக்கால் உன் தந்தை அப்போரில் செத்து

மடிந்தால் என்செய்வது என்றுதானே வருந்துகின்றாய்? நன்று நின் ஆண்மை; நீயும் ஓர் ஆண்மகனோ? அதோபார், நம் இளமதிவாணனும் வருகின்றான். அவன் எவ்வளவு வீறுடன் நடக்கின்றான் என்பதை நோக்குவாய். அவனுடைய மாமன் மிக்க வலிமையுடையவர்; திறமையும் பெற்றவர். அவர் முதல்நாட் போரில் மாண்டுபோனார். இன்றும் அவன் தந்தை போர்முனையில் இருந்து சமர்புரிகின்றார். ஏதேனும் தினையளவாயினும் வாட்டம் அவனது மலர்முகத்தில் உள்ளதா? பார்.

**இளமதி:**—(இருவரையும் அணுகி) ஆதிரை! வளவன்பால் என்னைப்பற்றி என்ன கூறுகின்றாய்?

**ஆதிரை:**—இவனது முகத்தைப்பார். இவன் தந்தை இன்றுதான் போர்க்களஞ் செல்கின்றார். இதற்குள்ளாக இவன் இவ்வாறு வருத்தமடைந்துளான்.

**இளமதி:**—ஏடா! வளவ, ஆதிரை கூறியது உண்மைதான் போலும். அட! மதியிலி. நம் ஆதிரைகூட நெருநல் அவள் தந்தையுடன் போர்க்களஞ்சென்று தொண்டுபுரிய விரும்பவில்லையா? ஒரு சிறு பெண், நாட்டின் நன்மைக்காகப் போர்க்களம் போகத் துணியும்போது, நீ ஓர் ஆண்மகன், மறவர் குடியினன், உன் தந்தை போருக்குச் சென்றமைக்கு வருந்தினால், சீ, நீ, என்ன பையல்........மிக்க அச்சங் கொள்ளி. (தன் கையிலிருந்த வில்லையும் அம்பையும் நீட்டி) அடா, இவற்றைப்பிடி. ஒன்றுக்கும் பற்றாதவர்களும் பிறர் உழைப்பால், இங்கு வாழ்பவர்களும் தந்நலமே பேணுபவர்களுங்கூட, இந்நாளில் வாயளவில் வீரம் பேசுகின்றார்கள். உண்மை

மறவர் மரபில் தோன்றிய உனக்கு இவ்வாறு அச்சம் தோன்றலாமோ? வளவ! நீ, என்னோடு நான் கூறுவதைச் சொல்லவேண்டும். இதோ கேள்: 'எடுத்தேன் வில்லை; தொடுத்தேன் நல் நாண்; குறித்தேன் அம்பால்; துணித்தேன் குறி.'

**வளவன்** :—எடுத்தேன் வில்லை; தொடுத்தேன் நல் நாண்; குறித்தேன் அம்பால்; துணித்தேன் குறி.

[மறுபடியும் கூறுதல்; மறுபடியும் விரைவிற் கூறுதல்.]

**இளமதி** :—நன்று வளவ! இன்றோடு நீ அச்சத்தை மறந்துவிடு. ஆடவனாகத் தோன்றிய எவனும் அறமுறை கெடாதவாறுள்ள ஆட்சியைக் காக்கக் கடவன். இன்றைக் கிருப்பார் நாளைக்கில்லை. நம் உடம்பு உள்ளபோதே அதனை நாட்டின் பொருட்டுச் செலவு செய்தால் புகழும் பேரின்பமும் கிடைக்கும். மற்றும் போரில் மாண்டவர் பொன்னுலகன்றோ ஆளுபவராவர். பொன்னொடு சேர்ந்தால் எந்நாளும் இன்பம் பெறலாம். யான்கூட என் அம்மை அன்னையின் ஆணைபெற்று நாளையே போர்முனை சென்று என்னால் இயன்ற தொண்டு செய்யப்போகின்றேன். 'எறும்பூரக் கல்லும் குழியும்' அன்றோ? 'ஓர் சிறு துரும்பும் கலம்நீர் தேக்கும்' என்பது நம் ஆன்றோர் பொன்மொழியல்லவா? ஆதலால் வளவ, நீ நமது நாட்டின் நன்மையை நாடும்போது அதற்கு மாறான எதற்கும் அஞ்சுதல் ஒழிக.

**வளவன்** :—இளமதி! நன்று, யானும் போர்க்களம் வர முயலுகிறேன். ஆனால் ஒன்று. என் தாய் என்னை அனுப்பமாட்டாரே. இருப்பினும் இன்றுமுதல் என்னைப் பற்றிநின்ற போரைக்குறித்த அச்சம்,

உன் நன்மொழியால் என்னைவிட்டு நீங்கியது. இனி மேல் போர்குறித்த அச்சமே எனதுள்ளத்தில் திண்ணமாக ஏற்படாது.

**ஆதிரை:**—இஃதன்றோ நல்ல செய்தி. வளவன் இப்போதுதான் ஓர் ஆண்மகன், வீரமரபினன், பழந் தமிழ்க் குடியினன் ஆயினன். வாழ்க இளமதி. நின் போன்ற இளைஞர்களே நம் நாட்டின் புகழ் ஓங்குதற் குற்ற தூண்களாவார்கள். 'கொண்டதே கோலம், கண்டதே காட்சி' எனத் திரியும் அறிவிலிகள் பலர் நாட்டைக் கெடுப்பதோடல்லாமல் வீரவுணர்ச்சியின்றி அடிமைத்தளை பூண்டு, தன்னலம் பேணித் தலைதறிகளாய் வாழுகின்றனர். அவர் எத்துணைப் பெரிய தகுதி வரப் பெற்றிருப்பினும், அம்மம்ம! அவர்களால் ஒரு நன்றியைத் தினைத் துணையும் இந்நாடு பெறாது; இஃதுண்மை. என் அருமைத் தோழர்களே! நீங்கள் மிக்க ஊக்கத்தோடு நம் நாடு மேலோங்கிச் செழிக்கப் பாடுபடுவீர்களாக. பெண்களாகிய யாமும் இயன்றவாறெல்லாம் நாட்டின் பொதுத் தொண்டுள் உங்கட்கு இனித் துணையாவோம் காண்பீர்.

**இளமதி:**—ஆதிரை! உன் வாழ்த்துப்படியே யாங்களும் சிறப்புறுவோம். சென்று வருவோம்.

[செல்லுகின்றனர்]

(காட்சி முடிவு)

---

# இயல் - உ

## காட்சி - க

உறுப்பினர் :—இளமதிவாணன், தேமொழி, பொன்மொழி.

இடம் :—மறவர் நெடுந்தெருவிலோர் இல்லம்.

காலம் :—முற்பகல்.

[வீரமா-நங்கை, தன் ஒரே மகன் இளமதிவாணனைப் போர்க்களம் அனுப்புதல்.]

இளமதி :— (பாடுதல்)

*நீலமயின் மீதுறைவான், நீறணிமா தேவன்மகன்,*
*பாலமுத வாய்க்குழந்தை, பள்ளிகொண்ட மான்மருகன்,*
*கோலவள்ளி தோளணைவான், கொஞ்சுதேவா னைகொழுநன்,*
*சூல்மலிமா முகில்வரைசூழ், சுடர்மணிவேல் தமிழ்முருகன்,*
*எங்கள்குல நற்கொழுந்து, எழுசுடர்த்தீ வண்ணன்மகன்,*
*எங்களுளத் தூயமணி, எழில்உறுகோ யிலினுறைவான்*
*திங்கள்குடை செங்கோல்நள்ளி, சேவைகொண்டு நனிமகிழ்வான்*
*எங்குறிறை இன்பப்பொருள், என்றென்றும் வாழியவே.*

அம்மா! அம்மா!! நீ, ஏன் என்னோடு பேசவில்லை? ஒரு குறும்பும் நான் செய்யவில்லையே. நான் பாடினால் நீ எப்பொழுதும் மகிழ்வாய்: கொஞ்சிப் பேசுவாய்: என்னைக் கட்டியணைத்து முத்தம் தருவாய். ஆனால் நீ இன்று என்னவோ வருத்தமாக இருக்கிறாய். ஏன் அம்மா! என் அப்பாவும் நின் அண்ணாவும் நேற்றும் அதன் முதல்நாளும் போர் புரியப்போனவர்கள் வரவில்லையென்று இப்படிக்

கவலையோடிருக்கிறாய்? (தோழியை நோக்கி) ஏடி சித்தி, ஏன் இன்னும் அவர்கள் வரவில்லையென உனக்குத் தெரியுமோ?

**தேமொழி** :—என் கண்ணே! எனக்குத் தெரியும்: நான் சொல்லுவேன். இங்கு வா (முதுகை நீவி) உன் தந்தையும், உன் அன்னையின் தன்னையும் போர்க் களத்துக்குப் போனார்களா?

**இளமதி** :—நேற்றும் அதன் முதனாளுஞ் சென்றார்கள்; நன்று; பின்னர்.

**தேமொழி** :—அங்கிருந்தே எங்கேயோ ஓர் ஊருக்கு, ஒரு பெரிய ஊருக்கு அரசர் பணியோடும் புறப்பட்டார் களாம். திரும்பிவர, பல நாட்களாகுமாம்.

**இளமதி** :—இருக்கட்டுமே; அதனால் ஏன்?

**தேமொழி** :—போகும்போது உன் அன்னையிடம் வந்து சொல்லிக்கொள்ளாமற்கூடப் போனார்கள். அத னால்தான் நம் தேவியார் வருந்துகிறார்கள்.

**இளமதி**:—அட! இதற்காகவா? நன்று நன்று. (அன்னையை அணுகி) அம்மா! நான்கூடத்தான் போர் செய்ய மிகவும் விரும்புகிறேன். எனக்கு மூன்றுநாட்க ளாக வில்லாசிரியர் வகுப்பில் முதலிடம் கிடைக் கின்றது. என்னோடு விற்பயிற்சிபெறும் மாண வர்களைவிட நான் சிறந்தவன் என்றும், மற்றும் போர்க்களஞ் செல்லும் திறமையும் எனக்குண்டு என்றும், ஆசிரியர் கூறினார். அம்மா! அம்மா!! இதோ பார் (அன்னையின் முகவாய்க்கட்டையைப் பற்றிக்கொண்டு) எனக்கு நன்றாகப் போர் செய்யத் தெரியுமே, என்னைப் பார் அம்மா!

(பாடுதல்)

"எடுத்தேன்வில்லை—தொடுத்தேன் நல்நாண்
விடுத்தேன் அம்பு—அடித்தேன் குறி,
இதோ நல்வாள்—அதோ நல்தோள்
உதோஒள்வேல்—இவைகொண்டு
பேரார்வத்தோடு மேலாகப் போர்நான்
நேராகச் செய்வேன் நீ நம்புவாயே,
அம்மா—அம்மா—என் அம்மா."

எனக்குப் போர் புரியவேண்டுமென்ற ஆசை மிகுகின்றது. நானும் போருக்குச் செல்லவேண்டும். (வளையொலி கேட்டல்) அதோ கேள்! போர்ச் சங்கமும் ஒலிக்கின்றது. நான் போகட்டுமா; என் சொல்லுகிறாய், அம்மா! அம்மா!!

தேமொழி :—என் அருமருந்தன்ன மகனே! நீ கேட்ட போர்வளையொலி என் காதுகளினும் நுழைந்தது. புலிக்குத் தோன்றிய நீ பூனையாவையா? உனது கருத்துப்படியே போருக்குச் செல்லுக. ஆனால், நீ போர்க்களத்தைப் பற்றிக் கேட்டறிந்தவனே யொழியக் கண்ணுற் கண்டறியாதவன் அன்றோ?

இளமதி :—ஆமாம்! காணுவிடில் என்னை? கடவுள்பா லன்புசெலுத்துபவர் அவரைக் கண்ணுற்கண்ட பின்போ அன்பு செலுத்துகின்றனர்? போர்க் களம் செல்லவேண்டும்; சென்று போர் புரிய வேண்டும்; பகைஞரை வெல்லவேண்டும் என்ற எண்ணங்கள் எல்லாம் எனக்கு மேலும் மேலும் வருகின்றன. அதனால்தான் போர்க்களஞ் சென்று பணியாற்ற விரும்புகின்றேன்.

பொன்மொழி :—என் செல்வமே! நான் அதற்குத் தடையாகேன். நீ கருதுவதையே நானும் உனக்குச்

சொல்லப் போகிறேன். நீ போர்க்களம் போகுமுன் நான் சொல்வதை மட்டும் கருத்தில் நன்ருகப் பதித்துக்கொள்வாய். அஃதாவது, போர்க்களத்தில் உனக்கு முன்னே, கொடியுடன் மலைபோல நிற்கும் தேர்க்கூட்டங்களைக் காணுவாய், தரை வரையில் நீண்டு வளர்ந்த கொம்புகளைக் கொண்டு போர் முழக்கம் செய்யும் வலிய யானைகளைப் பார்ப்பாய்; காற்றெனப் பறந்து, கறங்கெனச் சுழலும் குதிரைகள்தம் கடிவாளங்களை நெறித்துக் கடித்துத் துடித்து நிற்கும்; இன்னும் நெஞ்சில் உரங் கொண்டு நேர்மைத் திறம்பெற்று அஞ்சாமல் போர் புரியும் காலனையொத்த மறவர்கள் பெருங் கூட்டமாகத் தோன்றுவர். என் உயிரே! நீ அவற்றைக் கண்டு மார்பு பறைகொட்ட, உடலம் நடுநடுங்க, ஆண்மை கெட்டு அச்சத்துடன் முன் வைத்த காலைப் பின்வைத்தாலும், அன்றி உன் நெஞ்சம் பகைவரின் அம்பினுல் ஊடுருவப்பெற்றுப் போர்க்களத்தில் செங்குருதி வெள்ளத்தில் வீழாது, உன் முதுகு புண்பட்டு நீ உயிர் துறந்திருந்தாலும், நீ உண்டு உன் உயிர் வளர்த்து வாழ்தற்குற்ற என் பாலூறு மார்பை அறுத்தெறிந்து, உன்னைப்பெற்ற தால் எற்கு ஏற்பட்ட பழியையும், இழிவையும் போக்கிக் கழுவாய் செய்வேன். மகனே நான் கூறியவற்றை உளத்திற்கொண்டு போர்க்களஞ்செல்க.

இளமதி :—என் வீரத்தாயே! தாங்கள் கூறுவன கேட்டேன்; மகிழ்ந்தேன்; வணங்குகின்றேன். என்னைப்பற்றித் தாங்கள் ஏன் இவ்வாறு ஐயுற வேண்டும்? சற்று முன்தானே தாங்கள் என்னைப் பார்த்து, 'புலிக்குப் பிறந்த நீ பூனையாவையா?'

என்று கூறினீர்கள். நான் ஆண்மை கெட்டவன் அல்லன்; தாங்கள் அஞ்சவேண்டா; என் போன்ற வீரக்காளையர்கள் தம் கடனாகிய உரிமைப் போரிற் கலந்துகொண்டு தமது தொண்டினைச் செவ்வனே புரியப் பின்வாங்கமாட்டார்கள். அம்மையே! எனக்கு விடைதருக. நான் சென்று வருகின்றேன்.

**பொன்மொழி** :—என் உயிர் ஓவியமே! நீ சென்று வெற்றியுடன் வருக! (அணைத்து முத்தந்தருதல்) என் வீரச் செல்வமே! நீ இம் மணமிக்க எண்ணெயினால் நினது தலையை அழகுபெற வாரி முடித்து, அம்மலர்களைச் சூடிக்கொள்க. இப்பட்டாடைகளை இடையிற் செம்மைபெற உடுத்திக்கொண்டு நினது போர்ப்படைகளைத் தாங்கி அமர்க்களம் செல்க.

[தலையைச் சீவி, மலர்முடித்து உடை உடுத்தி, படைக்கலம் வழங்கி, கண்ணேறு கழித்தல்.]

**இளமதி** :—சென்று வருகின்றேன். இனிய என் அன்னாய்! சென்று வருகின்றேன்.

[வணங்கிச் செல்லுதல்.]

**பொன்மொழி** :—ஆ! என் செல்வமே! நீயும் என்னைப் பிரியுநாள் வந்ததே. முருக! இவனைக் காத்தல் நின்பரம். [பெருமூச்செறிதல்.]

**தேமொழி**:—அன்னாய் கண் கலங்காதீர்கள்! முருகன் அருள்புரிவன். அடியவர் துயர் களையும் அம்மை வள்ளிமணாளா! எம் பிள்ளை பால்மணம் அறாதவன்; பயிற்சியில்லாதவன்; ஒருகுடிக்கு ஒருமகன்; அவன் புகழ்பெற, வெற்றிபெற, துயர் நீங்கக் காப்பது நின் அருள். ஓம் முருகா. [வணங்குதல்.]

(காட்சி முடிவு)

## காட்சி - உ

உறுப்பினர் :—பொன்மொழி.

இடம் :—தோட்டிமலைப்புறத்துற்ற போர்க்களம்.

காலம் :—அந்திமாலைப்போது.

[நங்கை - பொன்மொழித்தேவி, தன் இளமதிவாணன் நெஞ்சிற் புண்பட்டு மாண்டமை கண்டு மகிழ்ந்து, தன் கொழுநன் சென்றவிடங் குறித்தேகல்.]

**பொன்மொழி:**—(அவிழ்ந்த கூந்தல், மருண்ட நோக்கு, சினமுற்ற தோற்றம், இவை பெற்று) ஆஓஆ! இளமதி! நின்னை, ஓர் உயர்குடி மறவன் என்றன்றோ எண்ணினேன்? இம்மாநில வாழ்வே மாண்புடைத்தெனக் கருதிப் போரிற் [illegible]துகிடும் நீயோ, என்மகன்? அல்லற்பட்டுழலு[illegible] சிற்றுயி ரினும் நாட்டின் தனிமாண்மைக் கா[illegible] [illegible]பொருட் டுப் போரிற் சாவும் பேருயிரைப் பெரி[illegible] [illegible]கொள் ளாத புழுத்தலை நாயினேய்! யாண்டுச் [illegible]? என் கண்ணிற் புலனுகாது எவ்விடத்தடா மறைந் துள்ளாய்? என்னே, இஞ்ஞாலத்தினியல்பு!

[திகைப்புற்று விழித்தல்.]

அன்று........ஆம், அன்று........அவ்வாறு கருது வது தவறுதான். ஓடிவந்தபோது மாண்டனன் என்றன்றோ கூறினரென நினைவு வருகின்றது. ஆம், ஆம் (பெருமூச்சுவிடுதல்) அறிவிலா மகனே! ஆண்மையற்ற அச்சம் நிறைந்தவனே! அடல் ஏற னைய நின் தந்தையின் திண்மைநிலை யெங்கே?

கோழைத்தன மிக்க இளமதி! நினது நொய்ம்மை நிலை யெங்கே? ஆ, கெட்டேன்! இளையவனுயி னும் இளைவுநிலை காட்டாது அடுபோராற்ற அவாவு கின்ற இவன், எம் மறவர்குல விளக்காவான் என நினைந்தன்றோ அமர்க்களம் அனுப்பினேன். விதை யொன்றுபோட முளை வேறு தோன்றியதே. என்னே, மக்கள் தம் மியல்பு! (நாநடுங்க) இளமதி! அடுகளஞ்சென்றபோது சலிப்பின்றி விளங்கிய நின்பால், இவ்வச்சம் எவ்வாறடா தோன்றிற்று? முன்வைத்த காலைப் பின்னெடுக்கலாமா? அந்தோ! (மிடறுவிம்ம) எமது மரபின் சிறப்பு இவ்வொரோ இவனு லழிவுற வேண்டும்?

[திகைத்து, விதித்து, நெட்டுயிர்த்தல்.]

நன்று! எதனையும் ஆய்ந்து செய்வதே சால் புடைத்து. ஆதரவற்ற மொழியை எண்ணி ஏங்கி மடிதல் முறையன்றுதான்........சென்று காண்பேன்.

[நகர்தல்.]

இதோ, போர்க்களப் பிணக்குவியல்கள்! என் மகனும் ஈண்டுத்தான் இறந்துகிடக்கவேண்டும். (பற்களை நெறித்து) பகைவர்தம் படைக்கலன் அவனது முதுகைத் துளையிட, அதனாற் புண்பட்டு மாய்ந்து கிடப்பனேல், ஆம். அவனால் எம்மறவர் மரபுக்குற்ற இப்பழியைப் போக்க, அவன் உண்டு வளர்வதற்குதவிய, என் பாலூறு மார்பைச் சிதைத் தெறிந்து, கழுவாய் செய்வேன்.

[தன் தனயனைத் தேடுதல்.]

என் மகன், என் மகன்!! (வாரி எடுத்து நோக்கல்) என் செல்வமகன், ஆ! இவன் மார்பன்றோ புண்

பட்டுள்ளது! மகிழ்ந்தேன்; உய்ந்தேன்; எம்மரபு ஓங்கிற்று; எங்கள் குடி சிறந்தது. இனி எம்நாடு உயர்வுபெறும்; எம் பகைவரும் ஒருங்கே மாய்வர்; இஃதுண்மை! ஐயமின்று. பிழைபெற்ற மொழி கேட்ட யானே அறிவிலேன். (இரக்கக் குரலுடன்) பேதை மதியால் என்னென்னவோ வெல்லாங் கருதினனே, இத்தீவினையாட்டி? 'எம் மாண்புறு மறவர்குடி எந்நாளுந் தன்நிலையில் திரியாது' என்ற வுண்மையினை இன்று கண்டேன்.

[விண்ணை உற்றுநோக்குதல்.]

ஏ! கொடுங் கூற்றமே! மண்ணிற் பிறந்தார் எவரும் இறப்பர் என்பது முறைதான். அதற்கும் ஒரு வரம்பில்லையா? நாட்டின் பெருமைக்குத் தோன்றிய ஒருவனை, ஓரிளமகவை, நீ நாடலாமா? எய்தவனிருக்க அம்பை நோவதாலாவதென்?

[நாநடுங்க.]

ஆ! கண்ணே, என் அரும்பெறல் மணியே! பால் மணம் அறாத நின்னையும் அக் கொடியவர் கொல்லத் துணிந்தனரே! என் செல்வக் கொழுந்தே! எமது குடிநிலை விளக்கமுற நீயாகிலும் உயிர் வாழ் வாய் என்றெண்ணிய இத்தீவினையாட்டியின் நெஞ்சம் புண்பட்டதே. ஐயகோ! (மிடறுவிம்ம) என் இனிய மகனே! 'அம்மா! அம்மா!! நான் ஆண்மையுள்ளவன்: வலிமையுடையேன்: போர் செய்வேன்: புலிக்குப்பிறந்த நான் பூனை யாவனோ?' என்றெல்லாம் என்னிடம் நீ மொழிந்தாயே. இப்போது உன்னை நான் போர்க்களத்தே கண்டு, அணைத்தெடுத்து அலறியும் நீ புரிந்த போரைக் குறித்து ஒன்றுங்கூறாது, ஊமையனாயிருத்தல் உனக்கேற்

குமோ? என் இளமதி! நான் உன் அன்னை ஆயிற்றே. என்னைப் பார்த்து நின் கொஞ்சுதல் மிக்க செஞ்சொன்மொழியால் ஒரு சொல் கூறுயோ? எழுத வியலா என் அழகிய ஓவியமே! குஞ்சியில் மலரணிந்து, கொட்டைக் கரையுடைய பட்டுடை யுடுத்தி, கொடுமை நிறைந்த இப் படைக்களத்தே போர் செய்ய நாடிய நீ, ஈரமற்ற நெஞ்சத்தவர் வேலால் மார்பிற் புண்பட்டு மாண்டபோது, என் அன்பின் நிழலே! நின் உள்ளத்தில் என்னென்ன கருதினையோ? நீ என்னை நினைக்கவில்லை? என் ஆசை மகனே! நான் என் சொல்லினும் வாய் பேசாதிருப்பது நினக் கழகல்லவே. அந்தோ, ஆ; கடவுளே!

(பாடுதல்)

முன்னாள் மடிந்த என்ஐ துயரம்
முடிவான் முன்ன ரந்தோ!
பின்னாள் என்னுவி கொழுநன் பிரியப்
பிழையான் என்செய்த துணரேன்
சின்னாள் முன்தோன் றித் தெருவிற் பயின்ற
சிறுபிள்ளை எந்தன் மணியை
இன்னே பிரித்த இயமன் றனெளிமை
என்னென் றியம்பி னைவேன்.

வீறுற் றுயர்ந்த குடியென்று மோங்க
வினையாற்றி வீழ்ந்த மகனே
சேறுற் றுயர்ந்த மலராள் தம்செல்வச்
சேமிப்பை யென்று முற்றே
ஆறுற்றுயர்ந்த வளநாடு போல
அழகோடு கல்வி யுற்றே
ஏறுற் றுயர்ந்த எழில்தோள்கள்பெற்றும்
எய்தும் பயனென் றிலையே.

எங்கா தலன்றன் திருமார்பி லேறி
எழிலோடு நின்ற மகனே
தங்காது போரிற் சமர்செய்ய வந்து
தனியே எங்குச் சென்றாய்?
துங்கா எனது துரையே மிகுந்த
சுடர்வீசு கின்ற மணியே!
வெங்காலன் கொள்ள விழையாம லென்னை
விரைவாகச் சென்ற தழகோ.

(வியப்புமேலிட விண்ணிடைநிமிர்ந்து) ஆ! என்னே? என் காதற் செல்வமா! செல்வத் துரையே, இள மதிவாண! இதுகாறும் நீ என் அருமைத் தன்னை யுடனேவுள்ளாய்? என் அண்ணால்! என் நிலையைத் தாங்கள் இன்று காண்கின்றீர்களா? என்னி னின்றும் பிரிந்துவர என் ஆருயிர்க் காதலரைத் தாங்கள் ஏன் அழைத்தீர்கள்? ஆ! நாதா, (எழுந்து விண்நோக்குதல்) தங்கள் பிரிவைத் தாங்கும் வலிமை எனக்கின்று. என் துணைவா! எனதாருயிர் நிலையே! என்னைத் தாங்கள் நோக்கியும் யான் உங்களை அடையாதிருப்பதோ? எனக்கிங்கு என்ன வேலை? என் பெரும! இதோ வருகின்றேன்; அன்புடன் என்னை ஏற்றுக்கொள்ளுங்கள்! என் னுயிரே, என்னை ஏற்றுக்கொள்க!! (மெலிந்த குரலில் சோர்ந்து அமர்தல்) என்னை ஏற்றுக் கொள்க!!!

[நிலமிசைச் சாய்தல்]

(காட்சி முடிவு)

## காட்சி - ௩

உறுப்பினர் :—வள்ளல் கண்டீரக்கோப் பெருநள்ளி; மணி முடியார்; பெருமக்கள் தலைவன்; மற்று முள்ளார்.

இடம் :—தோட்டிவரை நாட்டு முதனகர்.

காலம் :—முற்பகல்.

[வள்ளல் கண்டீரக்கோப் பெருநள்ளி, பொன்மொழி நங்கைக்கு நடுகல் விழாவியற்ற நாடல்.]

**கண்டீரக்கோப் பெருநள்ளி :—**

(பாடுதல்)

"வாழிசெந்தமிழ வாழிபைந்தமிழ் வாழிதண்டமிழ் நாடு
வாழிசெம்பொரு ளுறுநாவளர் வாணருறைதமிழ் நாடு
வாழிகற்பணி காதன்மங்கையர் வாள்வலிசேர்தமிழ் நாடு
வாழிநல்லறம் வளமுறநல்கி வான்தமிழ்காத்தளம் நாடு."

[வணங்கி, அரியணையிலிருக்க, யாவரும் அமர்தல்.]

அன்பார்ந்த குடிமக்களே! ஆன்றோர்களே! இன்ப நிலையுற்று வாழும் பெருமக்களே! நாம் எல்லோரும் இறையனுரருளால் இன்றுபோல் என்றும் இனிது வாழ்வோமாக. நாம் அனைவரும் இதுபோது, ஒரு பெரிய கடும்புயலால் முதலிற் கலக்குண்டு, நெடுந் திரையெழுப்பி, பேரோலமுற்று, மிகு வெள்ளம் பெருக்கிப் பின்னர் தன்னிலை யுற்று அமைதி பெற்ற ஓர் ஆழிபோ லாயினோம். முன் திங்களின் இற்றைய நாளில் நாம் ஓர் ஆய்வுக்குட்பட்டிருந் தோம். நமது நகர், மாற்றலர் வருகையால் அல்லோலகல்லோலங்கொண்டு அவதியுற்று வருந் திற்று. இவ்வாறு நமக்கு விளைந்த எதிர்பாரா இவ்விடர், வீணே தோன்றியதெனக் கருத

இடமின்று. இவ்விடர் நமக்குற்றதால், நாம் பெரும் பொருளை யிழந்தோம் ; பெறற்கரிய நெஞ்சாண்மை மிக்க மறவர்களைப் பிரிந்தோம் ; நம் நாட்டின் வருங்கால அருமருந்தன்ன இளைஞர்களை நீங்கினோம் ; எனினும், நம்பகைஞர் நம்மீது திடீரெனப் பாய்ந்து, எத்தகைய முன்னறிவிப்புமற்று வாழ்ந்த நம்மை, நசுக்கக் கருதியஞான்று, நாம் அனைவரும் ஓருணர்ச்சிபெற்று, ஒற்றுமை குலையாது, மெய் வருத்தம் பாராது, கண் துயில்பெறாது, செயன் முடிப்பையே கருதிநின்று, வெற்றிகொண்ட நம்மால், உற்ற துணையாயிருந்ததெதுவோ, அப் பொருளே, அன்புமேவிய குடிமக்களாய உங்கட்கும் முறையுறக் காக்கும் நும் புரவலனாகிய எனக்கு முள்ள நெருங்கிய தொடர்பின் திண்மையை உலகோருணர, இவ்வாறு நம்மை யாட்டுவித்த தென்பேன். ஏனெனில், இவ்வெற்றியால், நம் ஏதிலார் நாம் கொண்டுள்ள நாட்டுரிமை வேட்கையை நன்குணர்ந்தனர். இனிமேல் நாம் எதற்கும் அஞ்சவேண்டுவதின்று ; நம்பால் எத் துயரும் அணுகா ; என்றும் நமக்கு அவனருளே உண்டு.

மணிமுடியார் :— தோட்டி நாடாளும் தோன்றலே ! வணக்கம். பிறநாட்டவர்க்கு எத்தீங்குங் கருதாத நம்மைப் பகைத்தவர் எவ்வாறு வாகையணிய இயலும் ? நாம் காட்டிய நட்பை மறந்து, நம்மோடு ஒன்றுபட்டு வாழும் நெறியுணராது, நன்றி கொன்ற மக்கள் பெறும் பாட்டை யடைந்த நம் மாற்றல ரோடு நாம் சீறிச் சமர் செய்தபோது, நம் நாட்டின் புகழ், குன்றின்மேலிட்ட கொழுஞ்சுடர் விளக்கென

மிளிருமாறு ஓரருஞ்செயல் நிகழ்ந்தது. அச்செயல் ஒன்றே நாம் பட்ட பெருந்துயர்க்குற்ற ஓர் இணையற்ற பரிசில் ஆகுமெனக் கருதுகின்றேன்.

**கண்டீரக்கோப் பெருநள்ளி** :—மணிமுடியாரே! அஃதின்னதென யான் ஒருவாறுணர்கின்றேன். யான் அதனைப் போர் முடிந்த அப்பொழுதே நம் ஒற்றர்வழி யுணர்ந்தேன். இந்நன்னாள் அத்தகைய நிகழ்ச்சி கூறப்படுவதற்கு மிகவும் பொருத்தமுளதே யாகும். ஆதலால் நீவிர் அதனை ஈண்டுள்ளார் அனைவரும் தெளிவுபெற அறியுமாறு, கூறுமின்.

**மணிமுடியார்** :—எம்பெரும! நமது நாட்டின் சிறப்புக் குற்றன பல இருப்பினும், இற்றைப்போது யான் கூறப்புகும் செய்திக்கு அவை ஒப்பாகா. நம் நகரின் தொன்மை பெற்ற மறவர் குடியினனாகிய மாவீரவில்லி அவனது நெருங்கிய உறவினனாய மாவேலன் என்பான், களிற்றுப்போரில் ஓர் யானையால் குத்துண்டிறந்த மறுநாளே, குதிரைப் படை நடுவில் ஊழ்வலியாற் கொலையுற்று மாண்டான்; அந்தோ! இவன் பிரிவால் நாம் ஆண்மைமிக்க ஓர் உயரிய மறவர் மணியை இழந்தவராயினோம். அவனது சிறந்த உயிர், ஆண்டவன் திருவடி நிழலில் என்றும் இன்புற்று அமர்வதாகுக.

**கண்டீரக்கோப் பெருநள்ளி** :—குடிமக்களே! அன்று விண்ணுடுமேவிய மாவீரவில்லியைப்பற்றி மற்றொரு செய்தியுமுண்டு. அஃதாவது, போர் தொடங்கு முதனாளிரவில் நம் படைஞர்போல மாறுவேடந் தாங்கி நம் பாடியுட் போந்த, இவ் ஒற்றர்களை

எவ்வாறோ வுணர்ந்து, அவர்களை அவன் சிறைப் பற்றி எம்முன் கொண்டுவந்தனன். அவ்வொற்றருள் ஒருவன் தன் வரலாறுணர்த்துங்கால் எத்தனையோ பலவடிவுகொண்டு இதுகாறும் வெற்றிபெற்ற அவன் செயல், நம் மாவீரவில்லிபால் தோல்வி யுற்றமைக்கு வருந்தியபோது, அவர்கள் உடல் நிழலிலேயே ஒதுக்கிருந்தது, வேற்றொலி எழுப் பாது பின்தொடர்ந்து அவர்களைக் கைப்பற்றிய முறையைக் கூறினன். அஃது எமக்குப் பெரிதும் வியப்பினையளித்தது. அத்தகைய ஆண்மையுடைய வனின் பிரிவினால், நம்நாடு உண்மையாக ஒரு பெரிய வீரனை இழந்தது. பின்னர் மேலே கூறுக.

**மணிமுடியார்:**—வீரவில்லியின் மனைவி, மறவர் குலக் கற்பின் கொழுந்தாவாள்; அவள் தன் கொழுநன் மாண்டமைக்கு வருந்தினளாயினும், நெஞ்சுடைந்து அன்றே சாகவில்லை. அவள் குடிக்குற்ற ஒரே மகனை மிக்க இளைஞன் என்றும் கருதாது, போர்ப்பறை கேட்ட அப்போதே, நாட்டுமீது கொண்ட பேரன் பினால் தன் சின்னஞ்சிறு பிள்ளையை யழைத்து, மணங்கமழ் நெய்யை அவன்றன் நீண்ட மயிரிற் றடவி, அதனை வாரி முடித்து, மலர்களால் அழகு செய்து, பட்டாடை யுடுத்தி, வில்லும் வேலும், அவனிடம் தந்து, உச்சிமோந்து முத்தமிட்டு, வாழ்த்தி, உள்ளங் கலங்காது, உலகத்தவர் வியக்கப் போர்க்களஞ் செலுத்தினள்.

**கண்டீரக்கோப் பெருநள்ளி:**—மணிமுடிப் புலவரீர், என்னே அவள் தன் துணிபு! மறக் கற்பமைந்த மங்கையே அவளாவாள்.

**மணிமுடியார் :**—பின்னர், போர்முனையினின்றும் அவள் மகன் ஆற்ருது புறமுதுகிட்டோடினுன் என எவரோ கூறக்கேட்டு, அஃது உண்மையன்றெனவோராது, சினம் பொங்க செருக்களஞ் சென்று, ஆண்டு நெஞ்சிற் புண்பொருந்த மாண்டுகிடந்த தன் மகனைக்கண்டு, அவனை ஈன்ற ஞான்றினும் பெரிதும் மகிழ்வாளாயினுள். பிறகு அப்போர்க் களத்தினின்றே மிகுந்த அன்புடன் அவள் உயிர்த் தோழனுகும் மாவீரவில்லி மேவிய நாட்டை நோக்கிச் சென்ருள் பெரும! இவளது செயல் நம் நாட்டிற்கு மிகுந்த பெருமையை யளிக்கவில்லையா?

**கண்டீரக்கோப் பெருநள்ளி :**—புலவர்பெரும! இதிலென்னை, நீவிர்பெற்ற ஐயம்? அவள் செயல் நம் நாட்டின் சிறப்பைப் பத்துமடங்கு உயர்த்தியது உண்மையே. இத்தகைய வீர நங்கையர் என்றும் எங்கும் எக் காலத்தும் தோன்ருர்; பல நூற்ருண்டுகட்கொரு முறையே இந்நிலத்திற் காணப்பெறுவர். ஆதலால் நம் நாட்டவர் அவளை என்றும் மறவாதிருக்குமாறு ஓர் அரிய ஆக்கம் அவட்கு அமைக்கவேண்டும். இதுவே என் எண்ணம்: இவ்வாறு அவள் பெயர் என்றும் நிலவுமாறு செய்வதே நாம் அவட்குப் புரியும் கைம்மாருகும்.

**மணிமுடியார் :**—நன்று பெரும! தங்கள் எண்ணம் நிறைவேறுக. இதுபற்றி, நம் பெருமக்களின் கருத்து யாதெனை அறிவதும் ஏற்புடைத்தாகுமெனக் கருதுகின்றேன்.

**பெருமக்கள் தலைவன் :**—மன்னுயிர் புரக்கு மன்ன! எம் தோட்டி மலையின் தலைவ! அன்புடைமையோ

டிருந்து, என்பு நெக்குருகப் புகழும் மொழியுடைய ராய் மண்படிந்து தொழூஉம் எங்கள் வணக்கம், செம்மலர் மேவிய திருக்கழல்கள் புனைந்த தேவரீர் திருவடிகட்கு அணிசெய்வதாகுக. பெரும! நம் நகர்க்குரிய மங்கையாகும், இவ் வீரமாநங்கையே இனி எம்மவர்க்குற்ற கடவுளாவள். இப்பொன் மொழி நங்கை, மாசிலாக் குலத்து வந்தாள்; மன்னு புகழ்க்குரியாள்; தேசுடைக் கற்பின் கொழுந்தாய்த் தேர்வுறு தெய்வமானுள். மேலும், நம்மரபு வாழையடி வாழையெனப் பல நலங்களானும் விளக்கம் பெற்று, எல்லாவுரிமைகளோடும் நிலைத்து வாழ்வதற்குத் துணைநிற்கும் எம் ஒப்பற்ற கற்புடைத் தெய்வமாகவும் வாய்த்துள்ளாள்; நம் நாட்டுத் தமிழ்நலப் பெண்களின் தலைமை குன்றுக் கற்பமை வாழ்க்கையின் நற்றவக் கொழுகொம்பாய் மிளிர்கின்றுள். ஆதலால், அண்ணலே! இவ்வீரமா நங்கையை யாங்கள் இந்நகரத்தவர் தம் குலக்கடவுளாகக்கொண்டு வழிவழியாகத் தொண்டாற்றி மகிழ்ந்து வாழ்வதற்காய பல கடமைகளையும் இன்னே தங்களாணையின் கீழ்நின்று ஆற்றுவேம், என்ற பணிவுமிக்க மொழியைத் தேவரீர் திருமுன் குறிக்கின்றேம்.

**கண்டீரக்கோப் பெருநள்ளி** :—புலவர் பெரும! மாபெரு மக்களே! உங்கள் உடன்பாடறிந்து மகிழ்ந்தேம். நங்கைவிழா இனி நன்கு நிறைவேறும். எம் தேவி கோப்பெரும்பெண்டும் இன்னே நம் பொன்மொழி நங்கைக்கு நல்விழா எடுக்கச் செம்பொன் பணிகள் பல தந்து, எம்மை ஊக்கி வருகின்றதையும் இவண் குறிப்பிடுகின்றேம்.

**பெருமக்கள் தலைவன் :**—அண்ணலே! நம் ஊர்ப் பொது மன்றத் தண்மையில், இக் கற்புடை நங்கைக்கு ஒரு கோட்டம் வகுத்து வழிபாடுசெய்ய வாய்ப்புள தேல், நமது நகர்ப் பெண்மக்கள் அனைவரும் இக் கற்புடைய நங்கையின் வரலாறுணர்ந்து தம் வாழ்க்கை மேனிலையை யெய்துவரென்பது திண்ணம்.

**கண்டீரக்கோப் பெருநள்ளி :**—நன்று முதல்வ, அவ்வாறே செய்வோம். நாம், நம் பெருங்கணிக் கம்மியரைக் கொண்டு, நூல் வரம்பு கோடாது கற்புக்கணியாட் குக் கவினுறு கோட்டம் வகுத்து, கைவினை முற்றிய கடவுட்படிமம் நிறுவி, வித்தகரியற்றிய விளங்கிய கோலத்து முற்றிழை நன்கலம் முழுதும்பூட்டி, பூப்பலிசெய்து, காப்புக்கடை நிறுத்தி, விழாவும் வேள்வியும் விளக்கமுறத் தோற்றி, கடவுண்மங்க லஞ்செய்ய இன்றே முயல்வேம். ஆதலால், அன்பரீர்! தேவி திருப்பணி இடையீடின்றி நடை பெற, யாவரும் இன்னே முயலுமின்!

**பெருமக்கள் தலைவன்:**—அவ்வாறே பெரும! எம்பெருமான் கண்டீரக்கோப் பெருநள்ளி, வாழ்க!

**யாவரும் :**—வாழ்க! வாழ்க!!

(காட்சி முடிவு)

---

# இயல் - ரு

## காட்சி - க

உறுப்பினர் :—இளஞ்சேய், வன்பரணர், இளநங்கை, கண்டீரக்கோப் பெருநள்ளி.

இடம் :—நடுக்காடு

காலம் :—வேனில் நடுப்பகல்

[வறுமையுற்றுத் தம்மவருடன் கான்போந்த வன்பரணன், நள்ளியால் போற்றப்பெறுதல்.]

**இளநங்கை :**—(மிகுந்த சோர்வுடன்) தந்தாய்! நாம் போகுமிடம் சேர இன்னும் எவ்வளவு தொலை நடக்கவேண்டும்? விடிந்தது முதல் பதினைந்து நாழிகைக்குமேல் இதுவரையிலாகியும் தாங்கள் இன்னும் எங்களைக் கால்கடுக்க நடக்க விடலாமா? அண்ணல்! நெருநல் பகற்பொழுதில் உணவு கொண்ட எங்கட்கு, இன்று பகல்வேளை பாதி கழிந்தும் கால்வயிற்றுக் கஞ்சி கிடைக்கும் வழி கூடக் கிட்டவில்லையே? எனது வயிறு மிகவும் வாடிக் குழைகின்றது: கால்கள் நடுங்குகின்றன; காதுகள் அடைக்கின்றன; கண்களோ, மயக்கம் மேலிட இருளுகின்றன. அம்மம்ம! இனி என்னால் காலெடுத்துவைக்க முடியவே முடியாது.

[துவண்டு நிற்றல்.]

**வன்பரணர் :**—இளநங்காய்! என் கண்ணே, சிறுபொழுது தாங்கிக்கொள்; கலங்கவேண்டாம். என்செய்வது? இதோ வந்துவிட்டோம். விரைவில், நாம் சேரும்

இடத்தையும் அடைவோம். (கவலையுடன்) ஆ, இறைவ! எனது அறிவின்றிறனை யுணரவியலா வேற்றுநாடு சென்றமையாலன்றோ, இன்று, யான், இத்துணைத் துயர்மும் எய்தலாயினேன். என் கைப்பொருள்களும் செலவழிந்தன; வயிற்றுப்பசி நீங்கச் சிறுவுணவு பெறுதற்கும் இங்கு வழியில்லை ..........என் மகளே! எவ்வாறாயினும் நின் துன்பத்தைத் தாங்கிக்கொண்டு வருக. இன்னும் சின்னேரத்துள் நாமனை வரும் நள்ளியின் நல் விருந்தினரா யமையலாம்.

இளஞ்சேய் :—அண்ணல், அண்ணல்! நான் கூறுவதைக் கேட்டருள்க: என்னை நோக்குங்கள். எனக்குக் களைப்பு மிகுதியாகின்றது. என் முகத்தைக் கேட்டாலும் அஃதுரைக்குமே. ஐயகோ! எனக்கு நா வறட்சி எடுக்கின்றது; என் உடம்பும் களைப்பு மிகுதியால் நைந்து வருகின்றது. எனது வயிற்றை நோக்குங்கள்; பசியினால் அஃது எப்படிக் குழைகின்றதெனத் தெரியுமே. எனக்கு நெஞ்சு படபடக்கின்றது; கைகால்களிலுள்ள நரம்புகள் தசைகளை வலித்து இழுக்கின்றன. தந்தாய்! என்னால் மூச்சு விடக்கூட இயலவில்லை; இதோ, கீழே சாய்வேன்போலுள்ளேன்; ஓரடியும் எடுத்துவைக்க வலிமையும் எனக்கில்லை, ஆ! என்செய்வேன்.

[தளர்ந்து கீழிருத்தல்.]

வன்பரணர் :—அந்தோ! யான் என்செய்வேன்? எனக்குற்ற இத்துன்பத்தினை எவர்பாற் சென்று கூறுவேன்? ஆ, கடவுளே! எனக்கிவ்வாறு வரலாகுமா? பரிசில்கள் பல பெற்று வரிசைகள் மிக,

யான் வாழ்ந்த அந்நாளில், நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக, வளனும் நலனும் பொருந்த வாழ்வுடன் கூடிமகிழ்ந்த என் செல்வ மக்கள், இன்று, இந்நடுக்கானில், வயிற்றுப் பசியால் வாடி, நடக்கவும் நிற்கவும் இயலாமல் நைந்து குழையுமாறு, என்னை இடர்ப்படுத்தல் நன்றோ ! எளியவர்க்கிரங்கும் இன்னருட்செல்வமே! 'வறியார்க்கொன் றீவதேயீகை' எனும் முது மொழி இன்று பொய்த்ததோ? எட்டுணைச் சார்பு மின்றி வறுமையின் எல்லையுற்று வாடி வருந்தும் எம்பாலன்றே நின்னருட்பெருக்குச் சுரக்க வேண்டும்! அஃதவ்வாறில்லா திருத்தல் என்னை ?.... ஆம், ஆம். எய்தவனிருக்க அம்பை நோவதால் ஆவது என்? என் ஊழ்வலியே என்னைக் கொடுமைக்காளாக்கியது போலும்! நன்று....என் செல்வங்காள், வருந்தற்க. இங்ஙன் நீவிர் அமர்க; சற்று அலுப்பு நீங்கியதும் நாம் செல்வோம்.

[யாவரும் இருத்தல்.]

**இளநங்கை** ;—ஆ ! எந்தாய், அதோ, காண்மின் ! எவனோ ஒருவன் நம்மை நோக்கியன்றோ வருகின்றான். நம்மை என் செய்வனோ ; ஆ நாங்கள் என் செய் வோம் ?

**வன்பரணர்** :—மகளே ! அஞ்சாதே, நாம் ஏன் அவன்பால் அஞ்சவேண்டும் ? நாம் அஞ்சி நடுங்குமாறு நம்மிடம் என் உளது ? அமைதியுடனிருப்பாய். (உற்று நோக்கி) இளநங்காய் ! வருபவன், ஒருகால் இக் காட்டுக்குரிய வேட்டுவன்போலும். அவன் தோற்ற மும் உடையும் உயர்ந்த மரபினர்க் குரியனவா

யுள்ளன. வேட்டமாடவே இக்காட்டினை அடைந் தவனாகும் எனக் கருதுகின்றேன்........என்னே! எம்மையன்றோ நோக்குகின்றான். புன்னகை பூத்த முகத்துடன், எம்மை நாடி அண்மையிலன்றோ வருகின்றனன். ஆ, வியப்பினும் வியப்பு! எம்மை நோக்கித் தன் இரு கைகளையும் உயர்த்தி வணங்கு கின்றனனே.

[எழுதல்.]

**கண்டீரக்கோப் பெருநள்ளி** :—பெரும, எழுதல் வேண்டாம். அப்படியே வீற்றிருங்கள். அந்தோ, மிகவும் இளைத்துள்ளீர்களே. நெடுந் தொலைவிலிருந்து வந்திருக்கின்றீர்கள்போலும். மிகுந்த வாட்டமும் களைப்புக்குறியும் நும்பால் தோன்றுகின்றன. மலர் முகம் பெற்ற இவ்விளைய மக்களும் மிகவும் சோர்வுற்றுப் பசித்துள்ளனர்போல் காணப்படு கின்றனர். இடையீடின்றி, நும் உயிர் வாடாது, விரைவினில், இன்னே வேண்டுவன புரிவேன்; (சூழ நோக்குதல்) யாண்டோ போயுள்ளனர் வழி தப்பி, என் துணைவர்கள்: எனினும் இங்கு இடர்ப் பாடின்று. ஒரு நொடிப்பொழுது பொறுத்தருள்க. (தீ யெழுப்பி உணவு அடுதல்) பெரும! இவ்வுணவு மிக்க சுவை பொருந்தியது; மென்மையும் கொழு மையும் மிக்கதாயிருப்பதால் நும் களையை உடனே போக்கும். இதனை நும் மக்களுடன் உண்டு பசிப் பிணியை ஒருவாறு நீக்குக.

[புலவர், தமருடன் உண்டு, அருவி நீர் அருந்தல்.]

**வன்பரணர்** :—ஆண்தகையே! களைகணின்றி வாடிய எம்மை, இக்கடிய கானில் வலியவந்து காத்து,

உணவளித்து மகிழ்ந்த நினது இச்செயல், எம் அன்புகெழுமிய உள்ளத்தை நின்பால் என்றும் வணங்கச் செய்தது. நின் அருட்செயலால் யாங்கள் எம்மை வாட்டிய பசி தவிர்ந்தோம்; எம் உயிர் இன்பத்தில் திளைக்கப் பெற்றோம். அருட்செல்வ! நினக்கு, என்றும் குன்றாவாழ்வும் பெருநலனும் ஓங்கிப் பெருகுக! அன்புடையோய்! வணக்கம்; சென்று வருகின்றேம், (கைகூப்பி) விடையளிப்பாயாக.

கண்டீரக்கோப் பெருநள்ளி:—புலவர்பெரும! இதுபோது, யான் இக்காட்டினிடமாக இருக்கின்றேன். ஆகையால், விரைவினிற் போந்து, தங்களது வறுமை நீங்குமாறு, பெறுதற்கரிய பெருமைமிக்க அணிகலன் கொடுத்தற்கு, இவ்விடத்தில் என்னிடம் வேறொன்றுமின்று. எனினும் (முத்துமாலை, கடகம் இவற்றைக் கழற்றி வழங்கி) இவற்றைப் பெற்று மகிழ்ந்து, செல்க.

வன்பரணர்:—(வியப்புடன் பெற்று) எம் வறுமை நோய் களைய, உளம்பற்றிய வள்ளால்! கொடைப் பெருங் குன்றே! யான் நின்னைப்பற்றிக் கேட்பதற்காக வெகுளாது, எம்மைப் பொறுத்தருள்க. அன்ப, நீவிர் யாவிர்? எளியேன் நும் பெயரும் உறைவிடமும் அறியலாகுமா?

கண்டீரக்கோப் பெருநள்ளி:—(புன்னகை பூத்து) சான்றோய்! அவற்றை அறிவதால் நுமக்காவதென்னை? யான் இன்று கொடுத்தனகொண்டு, இனிதே நும் மக்களுடன் கவலையின்றி வாழுமின். யான் சென்று வருகின்றேன். [சென்று மறைதல்]

**வன்பரணர்** :—ஈதென்ன விந்தை! பெயரும் கூறாது, ஊரும் நவிலாது, பெறுதற்கரிய பெரும்பொருளைத் தந்து, எம்மைப்பற்றி எதுவும் உசாவி யுணராது செல்லுகின்ற இப் பெருமகன் யாவனோ?....முழு முதற் றலைவ, எம்குறை தவிர் முருக! இதுவும் நினது விளையாட்டுப்போலும்.

[கைகூப்பித் தொழுதல்.]

(காட்சி முடிவு)

## காட்சி - உ

**உறுப்பினர்** :—மாடலன் (ஒரு காவலன்); வன் பரணர்; இளநங்கை.

**இடம்** :—நடுக்காடு.

**காலம்** :—மாலைப்பொழுது.

[கண்டீரகோப் பெருநள்ளியே தமக்கருளினன் எனக் காவலனலறிந்து வன்பரணர் மகிழ்தல்.]

**மாடலன்** :—(மிகுந்த சோர்வுற நின்று) அடேயப்பா; என்ன பாய்ச்சல், என்ன வோட்டம்! மூச்சுத் திக்குமுக்காடி விட்டது. என் வாணுளில் இன்று வெருண்டு ஓடியதுபோல என்றும் யான் ஓடியதே யில்லை. எம் தோட்டிமலை நாடு இன்று வரையில் எத்தனையோ வீரர்களைப் பெற்றது: அவ் வீரருள் ஒரு சிலர் உளத்தினுல் மறக்கவியலாத அத்துணைப் பெரிய செயல்களையெல்லாம் மிக எளிதில் முடிப் பார்கள் என்று கூறுவர்; அச் சிலருள் ஒரு திறத் தவர்க்கு 'வில்லி' முதலிய சிறப்புப் பெயர்களும் வழங்கி வந்துள்ளன; எனினும், அவ்வரனைவரும்

எம்பெருமாற்கு ஈடாகார்; வில்திறன் பெற்ற எம் நள்ளியையொத்த வில்லியை, எவரும் அறிந்திரார் என்பது திண்ணம்....

**வன்பரணர்** :—ஐயா, ஐயா!

**மாடலன்** :—(திரும்பி நோக்காது) மிக விரைந்து செல்வது குதிரை என்பர்; பாய்ந்தோடித் தாவிச் செல்வதில் வன்மையுற்றது மான், என எவர்க்கும் தெரியும். இவையாவும் எம்பெருமான் நள்ளியின் ஓட்டத்தினையும் தாவிப் பாயும் விரைந்த செலவை யும் கண்டனவாயின், அம்மம்ம! தம் சிறுமைக்கு வெட்கி, ஆண்டே தலைகுனிந்து நாணுறும் என்பது திண்ணம்....

**வன்பரணர்** :—இளநங்காய்! இவன் நள்ளியின் காவலன் போற் காணப்படுகிறான். மறுபடியும் நான் அழைக் கின்றேன். ஐயா! காவல!

**மாடலன்** :—(வேறுதிசை நோக்கி) ஆம், ஆம். அப்படித் தான் தோன்றுகிறது. நன்று; ஆனால்,....மானைப் பின்தொடர்ந்து சென்றவர், யாண்டுதான் செல்லக் கூடும்? ஒருகால், நாம் சென்றவழி தெரியாது, நகர் நோக்கித் திரும்பினரோ? அன்றி எங்களைத் தேடி யலைகின்றாரோ? இதற்கென் செய்வது? பொழுதும் போகத் தலைப்படுகின்றது; புள்ளினங் களும் தத்தம் பெடையோடு இருக்கை யடைகின் றன. கங்குற் பறவையாம் ஆந்தையும் கிளைகூட்டி அலறுகின்றது. என்னை? மாலைப்போது வந்துற் றும் மான்பின் சென்றவரது வரவு கிட்டவில்லையே. "தேடிப் பார்க்கின்றோம்" எனச் சொல்லிப்போன அந்த எயினனும் காடனும்கூட, நான் தனித்திருப்

பேன் என்றுணர்ந்திருந்தும் இன்னும் திரும்பவில்லையே. நான் எங்குச்செல்வது!

இளநங்கை :—அண்ணால், நானழைக்கின்றேன். நீங்கள் மறுபடி கூப்பிட்டாலும் அஃதவன் காதில் விழாது. ஐயா! (மிக எழுப்பிய குரலில்) ஏ ஏ, ஐயா!

[கையைத் தட்டல்.]

மாடலன் :—(விரைவில் திரும்பி) யாரது? நீவிர் யாவிர்? இங்கு ஏன் வந்தீர்? எப்படி வந்தீர்?

வன்பரணர் :—காவல! யான் ஒரு தமிழ்ப் புலவன்; கிழக்கு நாட்டினன்; என்னோடு இவணுள்ள இவர், என் குடும்பத்தவராகும். ஐயா! யாங்கள் மிகுந்த தொலைவிலிருந்து வருகின்றோமாதலால் எம் கைப்பொருள்கள் யாவுங் கழிந்தன: மிக்க வறியநிலையில் நல்லுணர்வற்று, மாசு படிந்த இவ்வாடையோடு இக் கான் வந்தடைந்தோம். ஈண்டு, எங்களைப் பசிப்பிணி மிகவும் வருத்தலுற்றது. உணவு பெறும் வகையோ எங்கட்குத் தெரிந்திலது. பசிநோயால் வாடிக் களைப்புற்று, மயங்கி, யாது செய்வதென வுணராது, நெட்டுயிர்ப்புக்கொண்டு. ஒரு பலாமரத்தின் நீழலிற் றங்கியிருந்தபோது எங்கட்குற்றதனை என்னென் றியம்புவேம்?

மாடலன் :—என்னை? புலவரே; நும்மை எவரேனும் துன்புறுத்தினரோ? அன்றி, கொடிய விலங்குகளால் அச்சுறுத்தப் பெற்றீரோ? இனிக் கவலை கொள்ளாது என்பாற் கூறுமின், வேண்டுவன இன்னே ஆற்றுவேன்.

வன்பரணர் :—இனிய காவல! அவ்வாறு எங்கட்குத் துன்பம் நேர்ந்திலது; இன்பமே விளைந்தது.

மாடலன் :—ஆ! அப்படியா! நன்று. பின்னர் என் நிகழ்ந்தது?

வன்பரணர் :—அன்ப! நாங்கள் பலாவின் நீழலில் பரிவுற்றிருந்தபோது, ஓர் ஆண்டகை, வேடுவன் போலுள்ளார், எம்மை மகிழ்வுடன் அணுகினார்; நாங்களிருந்த நிலையினைக் கண்டு பெரிதும் வருந்தி யிரங்கினார்; தன்னுடனிருந்த பச்சையுணவுப் பொருளைத் தம்முடைய கைகளினாலேயே, தீ யெழுப்பிச் சூட்டுச் சுவையுள்ள உணவாக்கி எங்கட்குத் தந்தார். யாங்களவற்றை யுண்டுமகிழ்ந்ததும், எம்மிடத்துச் சில அணிகலன்களைப் பரிசிற் பொருளாக அளித்து, 'நீவிர் செல்க' என எம்மை விடுத்தார். யான் மிகவேண்டியும் ஊர் பெயர் முதலிய எவையுங் கூறாது எம்மினின்றும் விரைவாக நீங்கிக் கிழக்குத்திசை நோக்கிச் சென்றுவிட்டார். ஐயா! நீவிர், அவர் யாவர் என எமக்கு விளம்பலாகுமா?

மாடலன் :—புலவர்பெரும! தங்கட்குதவிய அப்பெருந் தகையாளர் தோற்றத்தில் எவ்வாறு காணப் பெற்றார்?

வன்பரணர் :—என் இனிய அன்ப! அவர்தம் திருமுடி நீலமாமணியால் இலங்கிற்று. நீண்ட வெள்ளிய இறகொன்றைத் தமது வலப்புறத்தே முடியணியாகச் சூடியிருந்தார். கழுத்தகத்தே வெண்ணிற முத்துக்கள் விளங்கின. மார்பினில் பொற்புள்ளிகள் நிறைந்த புலித்தோல் பொலிந்தது. அழகிய மணி வடங்கள் அவர் தம் வரைநிகர் தோள்களை அணி செய்தன. கைகளில் கடகங்கள் மிளிர்ந்தன. இடுப்பில் ஓர் உடைவாள் உறையுடன் திகழ்ந்தது.

வெற்றிக்கழல் புனைந்திருந்த அவர்தம் அடிகள், விலங்கின் செந்நீரால் தோயப்பெற்று, செம்பஞ்சுக் குழம்பு பூசப்பெற்றனபோல் ஒளிர்ந்தன. முதுகினில் அம்பறுத் தூணியும் கையில் வில்லும் கவின்பெற விருந்தன. தோற்றமோ, கண்டவரஞ்சும் வேட்டுவக் கோலம்; எனினும், புன்னகை தவழும் இனிய முகமும், அருளொழுகு கண்களும், அன்பு கனிந்த சொற்களும் ஒருங்கே கூடி உறைந்தன. காவல! அவர் தம் வடிவின் தோற்றம், 'அறனும் மறனும் அணைந்துற நின்ற ஓரருட் பெருங்குன்றம்' எனக் கூறினும் மிகையன்று.

**மாடலன் :**—பெரும! அவரே எம்தலைவர்: இத் தோட்டி மலை நாடாளும் மன்னவர்; வரையாது வழங்கும் வள்ளல்—கண்டீரக்கோப் பெருநள்ளியென எவரும் புகழ்ந்து கூறும் ஏந்தல். அவரைத் தேடியே யான் இந்நேரமளவும் ஈண்டுக்காத்திருந்தேன். இதற்குள்ளாக, எம்பெருமானும் ஊரை நண்ணி யிருப்பினும் இருப்பர். யான் விரைந்து செல்லல் வேண்டும். பொறுத்தருள்க. புலவர் பெரும! யான் சென்றுவருகின்றேன்.......ஆனால் ஒன்று ஐய! தங்கள் பெயர் என்னவோ?

**வன்பரணர் :**—காவல! 'வன்பரணன்' என்பது என் பெயராகும்.

**மாடலன் :**—நன்று, பெரியோய்! வணக்கம். விடை பெறுகின்றேன்.

[கைதொழுது மாடலன் மறைய, புலவர் அசைவற்று நிற்றல்.]

(காட்சி முடிவு)

## காட்சி - ௩

உறுப்பினர் :—வன்பரணர், இளஞ்சேய், இளநங்கை.

இடம் :—தோட்டிமலை நகர்ப்புறம்.

காலம் :—மாலைப்பொழுது.

[நள்ளியின் கொடையை வன்பரணர் வியத்தல்]

இளஞ்சேய் :—தந்தாய் !. ஆண்டு நோக்குங்கள். உயர்ந்த மாடங்களும் வானளாவிய விமானக் கோயிலும் நீண்டமதிலும் பெற்றதோர் ஊர் காணப் பெறு கின்றது. அஃதென்ன ஊர் ?

வன்பரணர் :—என்மகனே ! அதுதான் நாம் செல்லுதற் குற்ற இடம் ; நம்பால் வேட்டுவனுக வந்து சென்ற, கொடை மடம் பெற்ற வேந்தனின் பெருமைமிக்க நகரமாம். (அன்புமீக்கூர) எளியார்க்கிரங்கி இருந் தருள் புரியும் எம் இறைவ ! என்னே நின தருட்டிறம் ? நள்ளியின் உயரிய கொடைமுறை, என் தலைமுறைக்கே எட்டாத் திறம்பெற்ற தாகின்றது. 'யானே உயிராவேன், எனக்கருதும் வேல்வேந்தன் முறைசெய்யும் நாட்டினில் நெல்லும் நீரும் உயிரன்று; ஒருகுடைக்கீழ் ஆளும் மன்னர்க் கும் ஒன்றும் கல்லா வறிஞர்க்கும் உண்பதும் உடுப் பதும் பிறவும் ஒன்றே யாதலால் எளியவர்க்கீவதே பொருட்பயனும் : அன்றித் தானே நுகரின் பெரும் பிழை நிகழும்' என உளங்கொண்ட கோப்பெரு நள்ளி, கிடைத்தற்கரிய தேவாமுதம், இறைவனல் தரப்பெற்றதாயினும் தனக்கே யுரிமை கொள்ளாத் தன்மையனே யாவன் ; மற்றும் எவரிடத்தும் இன்புடையான் இவனே. அஞ்சுதற்குற்ற இழிவுக்கு நாணும் இவன், புகழ்தரும் தொண்டினிற் சோம்பி

நில்லாது, தன்னுயிரைக் கொடுத்தும் பணியாற்றுவன்! பழிபிறங்குந் தீநெறியாயின், உலகமே கொடைப் பொருளாகவரினும் அதனை ஒதுக்கித் தள்ளி அச்சிறுநெறி சேராது 'தனக்கென வாழாப் பிறர்க்குரியாளனும்'த் திகழும் பெற்றியனே யாவன். இவனாலன்றோ, இன்று இவ்வுலகு நிலைத்துளது.

**இளநங்கை** :—எந்தாய்! 'நள்' என்னும் இனிய ஓசை பெற்ற மாலைப்பொழுதினில் மருதம் என்ற இசைப் பாட்டையும் காலைப்பொழுதினில் கையகத்துள்ள யாழின் இசையோடு, செவ்வழி யென்னும் நல்லிசைப் பண்ணையும் வாசித்து மகிழ்ந்து வாழும் முறைமையை, நம்முடைய பாணர் மரபினர், நள்ளி வள்ளலின் எல்லையற்ற வள்ளன்மைப் புரப்பினால் மறந்து போயினர்' என முன்பு என்பால் தங்களால் சிறப்பிக்கப்பெற்ற அந் 'நள்ளி' என்பவர் யாவர்?

**வன்பரணர்** :—'என் அருமை மகளே' அன்று என்னாற் சுட்டப்பெற்ற அவரே, இன்று நம்மையெல்லாம் ஆட்கொண்ட நள்ளியாவர். (நகர்நோக்கி) நள்ளி! நீ நெடிது வாழ்க! இசையொலி செய்து வீழும் அருவியுற்ற உயர்ந்த மலைநாட்டு நள்ளி! நீ நெற் களஞ்சியம் விளங்கும் பெரிய நகரத்தையுடையாய்; உயரிய அணிகலனும் யானையும் கொணர்ந்து, நாளும் இரவலர்க்குக் கொடையாக ஈயவல்லாய்; ஆதலால் நள்ளி! எனது நா, நினது தளர்வில்லா வலிய முயற்சியாலாய செல்வத்தை வாழ்த்துகின்றது. ஆனால், பிறர்க்குக் கொடுத்து வாழும் பெருமை யற்ற வேந்தரைப் புகழ நினைந்து, அவர் செய்யாதன சொல்லி, அவர்தம் பண்புகளைச் சிறப்பித்துக்கூற, எம் சிறிய செவ்விய நா, அறியாததாயிற்று.

**இளஞ்சேய்:**—அண்ணல்! நாம் புறப்படும்போது—ஒன்று கூறினீர்களே! 'புலவர் பெருந்தகை, பெருந்தலைச் சாத்தனார், ஒருநாள், கண்டீரக்கோவின் தம்பியாகிய இளங்கண்டீரக்கோ என்பாரும் இளவிச்சிக்கோ என்ற ஓரிளவரசரும் ஒருங்கே மகிழ்ந்து உரையாடிக்கொண்டிருந்த இடத்திற்போந்து, இளங்கண்டீரக்கோவை மட்டும் உளமார மார்புறத் தழுவி, இன்மொழி புகன்று வாழ்த்தி, மற்றவரையேறிட்டுங் காணாராயினார்' என்றுரைத்தீர்களே; அஃதேன், எனத் தாங்கள் விளக்கவில்லையே.

**வன்பரணர்:**—என் அன்புமிக்க இளஞ்சேய்! தன்னைத் தவிர்ந்து, இளங்கண்டீரக்கோவைப் புலவர் தழுவினமைக்கு நாணமும் துயரும் பெற்ற இளவிச்சிக்கோ, 'நீவிர் ஏன் என்னைத் தழுவி மகிழ்ந்துரையாடாது வெறுத் தொதுக்கினீர்?' எனக்கேட்டான். அதற்குப் பெருந்தலைச்சாத்தனார், இளவிச்சிக்கோ தலைகுனிந்து வாடுமாறு மறுமொழி புகன்றார். அஃதென்னெனில், "வானளாவிய உயர்ச்சி பெற்ற சிறந்த மலைப்புறத்தே சென்ற தம் கணவர், நெடுந்தொலைவிலுள்ளபோது, தம்மைச் சிறப்பித்துப் பாடிவரும் புலவர் பெருமக்கள் காத்திருக்குமாறு செய்யாது, மிக்க பழங்காலந்தொட்டு, அணிகள் பெற்ற புல்லிய தலையினையுடைய பெண்யானையினைப் பரிசிற் பொருளாக்கித் தம் தகுதிக்கேற்ப, அப்புலவர்கள் மகிழுமாறு, தம் பெண்டிரும் கொடுக்குமாறுள்ள சிறப்புமிக்க வள்ளன்மையால் புகழ்மேவிய கண்டீரக்கோ இவன் ஆதலால், யான் உவந்து பெரிதும் தழுவி மகிழ்ந்தேன். நீயோ, பொற்றேர் பெற்ற நன்னன் மரபினனாயினும்

தழுவி யேற்பதற்குரியவனுயினும் விளங்கும் மொழி வளம் பெற்ற புலவர்கள் அணுகாமல், 'நுங் கோயிலின் வாயிற் கதவினை அடைந்தமையால், தெய்வ மகளிர் வாழுமாறு உயர்ந்துள்ள, அடுக்குகள் நிறைந்த, மலர்மணம் தவழும், அசைகின்ற முகில் பொழியும் நும் மலையைப் புலவர்கள் பாடாது நீங்கினர். ஆதலால், யானும் நின்னைத் தழுவ உளம் பெறுதவனுயினேன்' என்பதாம்.

இளநங்கை:—தந்தாய்! நம் புலவர் தம் பேச்சு, எத்துணைச் செருக்குடன் சற்றும் அச்சமற்றதாய தன்மையைப் பெற்றுள்ளது ? பெருந்தலைச்சாத்தனர், மிக்க உளத்திட்பம் பூண்டவராகவே காணப்பெறு கின்ருர். அவர் ஒரு மறப்புலவர் போலும் ?

வன்பரணர் :—என் மகளே ! நீ கொண்ட கருத்து பொய் யன்று 'பொய்யில் புலவர்' என நம் செந்தமிழ்நாடு சிறப்பித்துக் கூறுமாறுள்ள புகழ்ச்செல்வமாய ஓர் உயர்தகுதி, யாம் உண்மைக்கு மாருயின கூறி இழுக்குற்று வாழ்ந்தால், எமக்கின்று எய்துமா? என் இனிய மென்மொழி நங்காய் ! இம்மண்ணகத் தில் 'கொடை' யென மொழிந்தால், ஒன்றுமில் லாது வருந்துகின்ற வறியார்க்கு, அன்புடன் அளித்து மகிழும்போதுதான் அப்பெயர்க்குப் பொருளுண்டு. அவ்வாறின்று, வறுமையை யுணரா தார்க்கொன்று தருதல், இழுக்குற்ற ஒருவகை யுதவியே தவிர, 'ஈகை' எனும் பொருட்குரியதன்று. இற்றை ஞான்று, அம்முறை சிறிது வழுவியுள்ளது. பட்டாடையுடுத்திப் பாகை தலைக்கணிந்து, கட் டான கஞ்சுக மெய்காட்டி, தட்டின்றிக் கட்டுரை

கள் கூறுங் கலையாழிக்கையற்கே வட்டமிலா வருமானமுண்டு; அவ்வாறின்றி, யென்னை யொத்து யாக்கைப் புறந்தோன்ற, யாதும் தலைக்கின்றிப் போக்கற்ற சிந்தையராய்ச் சென்றால் சிச்சீ, மடப் பயலே! செல்லடா மட்டி! என்ற திட்டுக்கள்தான் பெறலாகும். அந்தோ! கண்ணீர் கடல்சூழ்ஞாலமே! நின்பால்தோன்றிய மக்களின் உளப்பாங் கிருந்தவா றென்னே?

இளஞ்சேய் :—அண்ணல்! இப்பெரிய கடல்சூழ்ந்த இயற்கை யழகு மிக்க இந்நிலவரைக்கண், அன்பு கெழுமிய ஆன்றோர்கள், இன்றில்லாது போயி னரோ?

வன்பரணர் :—அஃதன்று, மகனே! கொழுஞ் சேற்றில் நிற்கும் செழுந்தாமரை, அழகும் மணமும் பெற்று மக்களை மகிழ்விப்பதுபோல, இன்பமும் துன்பமும் கூடிய இந்நானிலத்தில், தம் துன்பத்தை யுன்னாது, பிறர்படும் துயரினைத் துடைத்து மகிழும் சான்றோ ரும் இன்று தோன்றாமலில்லை. அவர்கள் தோன்றிய தாலன்றோ, இவ்வையகத்தே யாண்டும் முகில் வளஞ் சுரக்கின்றது. மற்றும், என் மக்காள்! அச்சான்றோருட் சிலர், இரவலராவார், தம்பாற் பலகால்போந்து, புகழ்ந்துரையாடி இறைஞ்சுவா ராயின் கொடையளி செய்கின்றனர்; ஒருசாரார், ஒருகால் சென்று புகழ்ந்துரையாடியதும் அருளு கின்றனர்; மற்றும் ஒரு சிலர், இரவலர் செல்லுமுன் அன்னவர்தம் குறிப்புணர்ந்து ஈகின்றனர். இப் பெருஞ் சீர்மிகும் இவர்கள், முறையே கடை, இடை, தலைக்கொடையினர், என்று போற்றப்பெறு கின்றனர். என்றாலும், நம்மை யாட்கொண்ட

வள்ளல் பெருமான் கண்டீரக்கோப் பெருநள்ளி யைப்போன்று, இன்னரென அவரை யாம் உணராத போதே, நம்மிடம் வலிய மகிழ்வோடுபோந்து, நம் எளிமையைக் கண்ணுற்றிரங்கி, இனிய உளநலந் தரூஉம் கனிமொழிகள் பல பேசியதோடு, தனது விற்பிடித்து விறற்போரடுங் கைகளினுற் பாகம் செய்யப்பெற்ற சுவை பொருந்திய நல்லுணவால், அருள்மேவிய ஆதரவோடு நம்மைப் பசி நோய் நீங்க உண்பித்து, தன் திருமேனியைப் பொலிவு செய்து விளங்கும் உயரிய அணிகலனுய பொற் கடகத்தையும் ஒளியுறு முத்து வடத்தையும் யாம் வியப்புற்று மகிழுமாறு, நமக்குப் பரிசிலாக ஈந்து, தனது ஊரும் நவிலாது, தன் பெயரும் கூறுது, நம்மினின்றும் சடுதியிற் பிரிந்துசென்ற, ஒப்புயர் வற்ற, ஒரு பெருங்கொடைமேவிய பேரருள் வாணனை, யான் யாண்டும் கண்டவனல்லேன். இது வன்றே, தூய்மைமிக்க நல்வளம் பொருந்திய செந் தமிழ் புரக்கும் நந்தமிழகத்தின் மாண்புற்ற முதற் பெருங் கொடையாகும்.

**இளநங்கை**:—எந்தாய்! தாங்கள், இதுகாறும் கூறியன கொண்டு, எம் வள்ளற் பெருமான் கண்டீரக்கோப் பெருநள்ளியின் கொடைச் சிறப்பினி லீடுபட்ட என் சிறிய உள்ளம் அப்பெருமான்மீது, ஏதேனும் ஓரிசைப்பாட்டு இசைக்க அவாவுகின்றது. தாங்கள் எனக்கருள்செய்யின், இன்னே ஒரு பண்ணைச் செவ்வழியிற் பாடி மகிழ்வேன்.

**வன்பரணர்**:—இளநங்காய்! நின் அன்பிற்கு மகிழ் கின்றேன். எம் நள்ளியின்மீது நீ யாத்த இன்னிசைப் பண்ணைப் பாடுக.

**இளநங்கை :—** (பாடுதல்)

*பண்டும் பண்டும் நள்ளியின் மடவார் வரும்பாவலர்*
*கொண்டுவக்க அணியானை தந்து விடுமென்பரால்*
*வண்டுபாட மயிலால மான்கன்று துள்ளவரிக்*
*கெண்டை பாயச் சுனைநீலம் மொட்டலரும் கண்டீரமே.*

**வன்பரணர் :—** *என் கண்ணே! மிகவும் நன்றாயிருக்கின்றது. இப்பண்ணை, நம் நள்ளி அண்ணலை யாம் நாளை நேரிற்காணும்போது, நின் உடன்பிறந்தானாய இளஞ்சேயுடன் அப்பெருமான் திருமுன் வணங்கி, இனிமையாகப் பாடி, அவனை மகிழ்விப்பாயாக. எம் தமிழ்த்தாயே! அமிழ்தினும் இனிய சுவை மிக்க மொழிவளம் பெற்ற அன்னாய்! இயற்கை மேவிய இயலொடு, இசையுங் கூத்துமிலங்க, ஐவகை நெறியுட் படர்ந்து, செய்வகை பலவுங் கொண்டு, செந்தமிழ் நானிலம் சீர்மலிந்தோங்கிச் செழிப்புற்றுயர அருள்செய்யும் செந்தமிழ்ச் செல்வியே! நீ! எம் கொடைவளங் காக்கும் கொற்றவனும் நள்ளியை, என்றும் புகழ்வளமேவிய பூநில முதல்வனாய் ஓங்கச் செய்க; எம் சீர்மலிந் துயர்ந்த செந்தமிழ்ப் புரவலனை இப்பாரவர் போற்றிப் பணியுமாறருளுக; தண்ணளி சுரக்குந் தமிழவேளைத் தன்னிகரிலானாய்த் தழைக்கவுளங் கொள்க. இவைதாம் எம் போன்றாரால் எம்பெருமாற்குக் காட்டும் நன்றியறிதலாய நற்செயல்.*

*வாழிபல வூழிதொறும் வாழிதமி ழன்னாய்*
*மைந்தரொடும் தொண்டரொடும் வாழிதமி ழன்னாய்*
*வாழிதிரு வார்கரந்தை மேவுதமிழ்ச் சங்கம்*
........................................
*வாழிதமிழ்த் தாயருளைத் தேடியநல் லோரே.*

(காட்சி முடிவு)

# ௨. சோழன் கரிகால் வளவன்

---

## வரலாறு

நிலமகளின் திருமுக மெனப்பெறும் காவிரிசூழ் சோழவளநாடு, இற்றைக்கு இரண்டாயிரம் ஆண்டு கட்கு முன்னர் உறையூர்ப் பெருநகரைத் தலை நகராகக் கொண்டிருந்தது. அதுபோது, உருவப் பஃறேர் இளஞ்சேட்சென்னி என்பான் தன் துணையாய அழுந்தூர் வேள்மகள் என்பாளோடு இனிது வாழ்ந்து அரசியலை நடத்தி வந்தான். அவர் கட்குத் திருமாவளவன் என்ற ஒரு மகன் பிறந்தான். திருமாவளவன் குழவிப் பருவத்திலிருக்கும்போதே அவன் தந்தை இளஞ்சேட்சென்னி விண்ணாடு புரக்க எய்தினான். தந்தையைப் பிரிந்துள்ள திருமாவளவன் இளையவனாயிருத்தலைக் கண்டு அவனது தாயமாக்கள் நாட்டில் கலாம் விளைத்து அவனையும் ஊறு செய்வா ராயினர். அதனால் திருமாவளவன் உறையூரி னின்றும் நீங்கிக் கருவூரடைந்து உருக்கரந்து திரிவா னாயினான். தாயமாக்களும் நாட்டைக் கைப்பற்றிக் கொடுங்கோன்மையைக் கொலுவீற்றிருக்கச் செய் தனர். இவ்வாறு, நாட்டில் நாளும் கொடுமைகள் மிகுவதை யுணர்ந்த உறையூர்ப் பெருமக்கள் ஒரு நாடு கூடி நெடிது கருதி, கழுமலத்து நின்ற யானை யைக் கட்டவிழ்த்துவிட்டனர். அவ்யானையும் காவிரி யாற்றின் கரைவழியே கருவூரடைந்து, ஆங்கே

கரந்து திரிந்த திருமாவளவனைப்பற்றித் தன் எருத்தத்தின்மீது எழுந்தருளச்செய்து உறையூர் வந்தது. இதை யறிந்த தாயமாக்கள் திருமாவளவனைப் பிணித்துச் சிறையில் இட்டுச் சிறையினையும் தீ மூட்டினர். திருமாவளவனோ, அவன் மாமன் இரும்பிடர்த் தலையாரின் பேருதவியினால் சிறையினின்றும் வெளிவந்து தன்னை எதிர்த்து நின்ற பகைவர்கள் யாவரையும் வென்று அரசுகட்டிலேறினான். அவன் இவ்வாறு சிறைத் தீயினின்றும் தப்பிய போது அவனுடைய கால்கள் தீயினால் சிறிது கரிந்தமையால் அவனை யாவரும் கரிகால் வளவன் என அழைக்கலாயினர். கரிகால்வளவன் இவ்வாறு தனக்குரிய நாட்டைக் கைப்பற்றியதும் உள்நாட்டுக் குழப்பங்கள் யாவையும் அடக்கி நல்லரசு அமைத்தான். பிறகு தமிழ்நாட்டு மன்னர்களையும், வடநாட்டு வேந்தர்களையும் போரில் புறமுதுகிடச்செய்து வடக்கில் இமயம் வரையுள்ள நாடுகள் யாவையும் தன்னடிக்கீழ்ப்படுத்தி, அவ்வெற்றிக்கு அறிகுறியாகத் தனது புலிக்கொடியையும் இமயத்தின் முடியின்மீது பொறித்துவைத்தான். இவ்வாறு இமயமுதல் குமரி வரையிலுள்ள கடல்சூழ்ந்த ஞாலத்தைத் தனது ஆட்சிக்குட்படுத்தி ஆண்டுவரும் நாளில் யாண்டு முதிர்ந்த பெரியோர்கள் இருவர் அவனது அவைக்களம் புகுந்து, "இவன் இளைஞனாயுள்ளான் வழக்கறியான்" எனக் கூறி, அவர்களது வழக்கை அங்கு அறிவிக்காது வெளிச்சென்றனர். அதை யுணர்ந்த வளவன் தானும் ஒரு நரை முதிர் முதியவர் வடிவு தாங்கி அவர்களை யழைப்பித்து, அவர்களிருவரும் உவப்ப வழக்குத் தீர்த்து, பின்னர் உண்மை வடி

வுடன் தோன்றி அவர்களை வியப்புறச் செய்தான். ஒருகால், இவன் காவிரியாற்றிற்குக் கரை அமைக்கக் கருதிப் பல மன்னர்களுக்கும் தனது கருத்தை அறிவிக்க, அவர்களும் அவனது ஆணையை முடிமேற் கொண்டு காவிரியடைந்து கரைகட்டத் தலைப்பட்டனர். ஆனால் பிரதாபருத்திரன் என்பவன் மட்டும் இவனது கட்டளையைப் பொருட்படுத்தவில்லை. அஃதை யுணர்ந்த வளவன் பிரதாபருத்திரனது வடிவம் திறம்பட விளங்கும் ஒரு படத்தைக் கொணர்ந்து அதை உற்றுநோக்கி, அவனது நெற்றியில் ஒரு கண் இருக்கக்கண்டு அதுவே அவனை இறுமாப்புறச் செய்தது எனக் கருதித் தனது உடைவாளால் அக்கண்ணைக் குத்தினான். உடனே அப் பிரதாபருத்திரனின் நுதற்கண்ணும் மறைவுபட, அவன் அஞ்சி நடுங்கி, ஓடோடியும் காவிரி நாடு வந்து, கரிகால் வளவனை வணங்கி அவனது ஆணையை ஏற்றுக் கொண்டான். இத்தகைய வெற்றியும் வீரமும் ஆண்மையும் மிக்க கரிகால் வளவன் தமிழ்மொழியிடத்தும் தமிழ்ப்புலவரிடத்தும் நீங்காத பற்றுள்ளம் கொண்டவனாக விளங்கினான். இவனது பெரும் புகழ் விளங்குமாறு பொருநர் ஆற்றுப்படையை யருளிய முடத்தாமக் கண்ணியார் என்ற புலவருக்குப் பெருஞ் சிறப்புகள் பல செய்தான். மேலும் இவனது ஆட்சி, வீரம், புகழ் முதலியன தோன்றப் பட்டினப் பாலை எனும் நூலை இயற்றித் தந்த கடியலூர் உருத்திரங்கண்ணனார் என்ற புலவர்க்குப் பதினாறு நூறாயிரம் பசும்பொன்னைப் பரிசிலாகத் தந்தனன். மேலும் இவன் காடு கெடுத்து நாடாக்கிப் பல ஊர்களைத் தோற்றுவித்தான். வாணிபமும் வேளாண்

மையும் மிகுதற்பொருட்டு இவன் பல கால்வாய்களை யும் புதிய பாதைகளையும் உண்டாக்கினன். இவை வளம்படுதற்காகவே தனது தலைநகரையும் காவிரிப்பூம் பட்டினத்திற்கு மாற்றிக்கொண்டான். பிறகு அவன் தன் மனதிற்கிசைந்த உருநலமிக்க நாங்கூர் வேள்மகள் எனும் கற்புடை நங்கையைத் தனது வாழ்க்கைத் துணையாகக் கொண்டு, பல ஆன்றோர்களின் துணை வழி நின்று, இமயமுதல் குமரிவரையில் தனது ஆணையைச் செலுத்தி, யாவரும் அவன்றன் அடிகளைப் பரவிநிற்குமாறு பெருமையுற்று, இனிதே பலநாள் வாழ்ந்து வந்தான். நலம்!

# இயல் - ௧

## காட்சி - ௧

**உறுப்பினர் :**—மணிமொழிக் கூத்தர், மணிமொழி, இளம்பிறை, கிளிச்சிறை, ஒளிமணி, இரும்பிடர்த் தலையார்.

**இடம் :**—உறையூரின் முருகன் திருமுன்னர்.

**காலம் :**—மாலைப்பொழுது.

[உறையூர்ப் பெருமக்கள் முருகவேளின் திருமுன்னர்க் கூடி இளஞ்சேட் சென்னிக்குப் பிறகு அரசுக்கு உரியாரைப்பற்றி முடிவு செய்தல்.]

**மணிமொழிக் கூத்தர் :**—உலகம் முழுதும் உவந்தளிக்கும் உரவோய்! நினது அருள் வெள்ளம் எங்கள் பால் மிகுவதாகுக. பெரும! "தீச்சினம் செறிந்த எம் உள்ளமாம் தோணியை, இவ் வுலகமாகிய பெருந்துயர்க் கடலினுள் அறிவு என்ற பற்றுக் கோலால் தள்ளிச்சென்று, இறுமாப்பு என்ற பாறையில்மோதி, இடர்ப்பாடுற்றுத் துன் புறாதவாறு நீ என்றும் துணைபுரிகின்றாய்," என நின் அடியவர் கூறும் அமுத நன்மொழியும் இன்று எம்பால் பொய்த்ததே! மன்னுயிர் யாவும் தன்னுயிர் எனக் கருதி, நாட்டில் பசி, பிணி, பகையின்றி, கல்வியும் செல்வமும் கவின்பெற விளங்க இத்துணை நாள் எம்மைப் புரந்துவந்த, இளஞ்சேட் சென்னி, இன்று நின் திருவடிநீழலை எய்தியதால்.... ....என்னே! இந் நாட்டிற்குற்ற தீவினைப்பயன்.

'மக்கள் யாவரும் மனங்களிக்கத் தோன்றினன் தக்கதோர் செல்வன்,' என நாளும் பறையடித்துக் கொண்டிருந்த எனது உள்ளமும், இற்றைக்கு, எங்கு இருக்கின்றான் என யாவரும் அறியாதவாறு அவன் மறைந்ததிலிருந்து, பாழ்பட்டு ஒழிந்ததே. பசுவினும் சாந்த மிக்க பான்மையராய்த் தோன்றிய பங்காளிகள்....இளஞ்சேட்சென்னி இன்று இறந்ததும், எள்ளளவும் இரக்கமின்றி அவன்றன் அருமருந்தன்ன மகனையே அழித்துவிடத் துணிந்தனரே! ஏ! முருக! இவை நின் செயலா?

**மணிமொழி** :—அண்ணா! தாங்கள் கடந்தனவற்றைக் கருதுவதாற் பயனென்னை? இனி நாம் செயற்பாலனவற்றையே சிந்தித்தல்வேண்டும்.

**மணிமொழிக் கூத்தர்** :—மணிமொழி! நன்கு உணர்த்தினாய். நம் மன்னன் மகனிடத்து உற்ற என் அன்பு இங்கு இவ்வாறு நிகழ்வித்தது........நன்று. நம் நகர்ப் பெரியார் பலரும் இன்று இங்கு ஒரு நாடு கூடக் கருதியுள்ளனர். நம் மன்னன் இளஞ்சேட்சென்னியின் மைத்துனர் இரும்பிடர்த்தலையாரும் இவண் எழுந்தருளுவதாக உள்ளார். நீ சென்று, இங்கு பூசனைக்குரியன யாவும் கொணர்க.

**மணிமொழி** :—பெருந்தகையே! அவ்வாறே செல்லுகின்றேன். ஆனால் அவர்கள் எதன்பொருட்டு ஈண்டுக் கூடுகின்றனர் என்பதை யான் அறியலாகுமோ?

**மணிமொழிக் கூத்தர்** :—அதுவா! யாவும் இன்று நடக்கும் நம் நாட்டின் அரசியற் குழப்பத்தைப்பற்றியே யாகும் நம் மன்னனின் தாயத் தலைவன், மன்னன் மகன் திருமாவளவனை அச்சுறுத்தி, அல்லற்படுத்

தியதோடு அமையாது, குடிமக்களாய நம்மையும் நாளும் வரி முதலிய தொல்லைகளால் பிணிப்பித்து வாட்டுகின்றனன் என்பது நீ அறியாததொன்றல்லவே? அத் தொல்லையினைக் களைந்து, நல்லரசொன்று நம் நாட்டில் நாட்டவே இன்று கூடுகின்றனர். நீ விரைந்துசென்று வருக.

**மணிமொழி** :—அண்ணலே! இதோ சென்று பூசனைப் பொருளுடன் மீள்வன் [போகின்றான்.]

**மணிமொழிக் கூத்தர்** :—கிளிச்சிறை! ஈண்டுள்ள யாவற்றையும் முறைப்படுத்துக! அதோ! பெரியார் அனைவரும் வருகின்றனர் (மணிமொழி பூசனைப் பொருளுடன் வருதல்; பெரியார் பலரும் நுழைதல்) அன்பர்களே! வரவேண்டும்! நாட்டின் பெருந்தொண்டர்களே, தலைவர்களே, வரவேண்டும்! வரவேண்டும்!! [கைகுவித்தல்.]

**இரும்பிடர்த் தலையார்** :—மணிமொழிக் கூத்த! வணக்கம் (யாவரையும் பார்த்து) யாவரும் இவண் அமருங்கள் (அனைவரும் அமர்தல்) அன்பர்களே! இதுபோது நாம் நம் நாட்டின் நிலைமையை நாடி ஈண்டுக் குழுமியுள்ளோம் என்பதை நம்மில் எவரும் அறிவோம். ஆதலின், நாம் இன்னே இதுபற்றி ஆவன கருதித் தொழிற்படவேண்டும்.

**இளம்பிறை** :—பெரியீர்! யான் சொல்வதற்குத் தாங்கள் சற்றுச் செவி சாய்த்தருளல் வேண்டும்....ஒரு பச்சிளங்கன்றின் பொருட்டு, மணிநா நடுங்கியதை உற்று அறிந்து, தன் அமைச்சர் மொழிந்ததையும் மறுத்து, தன் மகன் என்றும் பாராது தேர்க்கால் படுத்தி நன்முறை செலுத்திய முடியுடைச் சோழன்

வாழ்ந்த இந் நாட்டில், இன்று பல பெருமக்கள் இறக்க, அவரின் உற்ருர் உறவினர் நடுங்க, நாட்டில் குழப்பமும் குறைபாடும் மிகுந்து கொடுங்கோன்மை கொலு வீற்றிருக்க, நாம் கண்டு வாளாவிருத்தல் நலமாகுமா? நாயை அடிக்கக் குறுந்தடியும் நச்சுப் பூடை யொழிக்க நாளும் ஞாயமும் வேண்டுமா? தங்களைப்போன்ற பெரியார்கள் இன்றே வலிந்து அரசுரிமையைக் கைப்பற்றி நன்முறை வகுத்து நாட்டில் நல்லாட்சி நிறுவுதல் வேண்டும்.

**இரும்பிடர்த் தலையார்** :—இளம்பிறை! நன்று கூறிஞய். நல்லரசு நிறுவுதல் எவ்வாறு ஆகும். தாயமாக்கள் தலைவன் தனியாட்சி செலுத்தும்போது நமக்கு இங்குச் செல்வாக்கு ஏது? நம் அரசிளங்குமரன் அடைந்தவிடத்தை இன்னும் அறியேம். அவ னின்றி அரசை வலிந்துபற்றுதல் எளிதில் ஆகுமா?

**ஒளிமணி** :—தலைவ! இதற்குத் தாங்கள் பின்னிடவேண் டாம். யாங்கள் யாவரும் இன்றே தங்களுடன் போர்க்கெழுகின்ருேம். நீங்கள் எமது படைத் துணைகொண்டு, தாயமாக்கள் தலைவனைத் தகர்த்து விடலாகும். நமது நாட்டிற்கு உரிமையாய்ப் பிறந்த உரவோன் ஒருவன் இருக்க, எங்கிருந்தோ வந்த, எத்தகைய தொடர்பும் இல்லாத ஏழை ஒருவன், அரசு கட்டிலில் வீற்றிருந்து, அரசாட்சி செலுத் துவதென்ருல், ஆ! இத்தகைய அடாத செயலுக்கு என்செய்வது? பெரியீர்! இன்னே படையைத் திரட் டுங்கள், அரசைப் பற்றுங்கள், பின்னர் அரசன் மகன் சென்ற இடத்தை ஆய்ந்து கண்டு அரியணை ஏற்றலாம்.

**இரும்பிடர்த்தலையார்** :—என் இனிய அன்பர்களே! என்னை மன்னித்தருள்க போர்ப்படை திரட்டுவது என்பது சால்புடைத்தன்று; ஒருவன் ஒரு செயலில் முற்படுங்கால் ஆராய்தற்குரியன பலவாகும். ஆதலால் நாம் இதுபோது போர்க்கெழுமுன் நம் வலியும், நம் படை வலியும், நம் பொருள் வலியும், நம் துணைவலியும், நம் மாற்றார் வலியோடு மதிப்பிடல் வேண்டும். அவற்றுள் நம் வலி மிகுமாயின் போர்க்கெழுவது நலனாகும். எனவே, நண்பர்களே! நம் பகைவராய நம் மன்னனின் மாற்றலர் சேர, பாண்டியராய இருமுடிப் பெருமன்னர்களாலும் இரு மருங்கும் துணைபெற்று, நாட்டின் பெரும் படையின் துணையும், பொருள்நிதியின் ஆட்சியும் உள்ளாராய் இருக்க, நம்மால் என் செய இயலும்?

**கிளிச்சிறை** :—பெரும! பின்னர் என்ன செய்வது; இவரால் என்றும் இடர்ப்பட்டுச் சாவதா?

**இரும்பிடர்த் தலையார்** :—தம்பி! கிளிச்சிறை! பொறுத்தார் பூமியாள்வார். ஆகு நாளன்றி எடுத்த கருமங்கள் அடுத்து முயன்றாலும் ஆகுமா? நாம் அரசுரிமையைப்பற்றிப் பின்னர்க் கருதுவோம். நம் அரசிளங்கோ, இன்று எங்குளன் என்பதை யாம் அறியோம். எனவே அவன் பொருட்டே முன்னர் ஆய்வோம். (தனித்து) கருத்து அறியாத சிறுவனையிற்றே! அவன் இதுபோது களைகண் அற்று எங்குக் கண்கலங்கிக் கவல்கின்றனனோ? (மற்றவர்களைப் பார்த்து) அன்பர்களே! எனக்கு ஓர் எண்ணம் எழுகின்றது. நாம் இறைவனைத் தொழுது, கழுமலத்தே நிற்கும் யானையைக் கட்டவிழ்த்துவிட்டால் அஃது திருவருளால் நம் அரசுக்

குற்ற ஒருவனைக் கொண்டுவந்து சேர்க்கும். அதன் ஆய்வில் நம்மன்னர் மகன் திருமாவளவன் வாராறு யின் அவன் இறந்தான் என்றே கொள்ளல் வேண் டும். இறைவன் அருளாற்பெற்ற ஒருவனைக் கொண்டு நம் இறைமாட்சியை நிறுவுதல் ஏற்புடைத்தாகும் அதுவே நிலையும் பெறும்.

**மணிமொழிக் கூத்தர் :**—தாங்கள் கூறுவதே மிகவும் பொருத்தமுடைத்து. இறைவன் துணைவலியின்றி எம்மால் என்ன செய்ய இயலும் ?

**இரும்பிடர்த் தலையார் :**—நன்று ! கூத்த ! நன்றேயாகுக. நாம் யாவரும் நம் நாயகன் முருகப் பெருமானை வணங்கி, நம் மன்னர் மகனையே நாம் அடையவும், நம் வினை முட்டின்றி நிறைவேறவும் வாழ்த்துவோமாக. தாங்கள் முதலில் முருகற்கு வழிபாடியற்றிப் பூசனை புரியுங்கள்.

[மணிமொழிக் கூத்தர் வழிபாடியற்றிப் பூசனை புரிதல், பின்னர் யாவரும் கடவுளைத் துதித்தல்.]

(பாடுதல்)

கூவுநற் கோழியின் கொடியோனே !
கூரிய வேலுடைக் குமரேசா !
காவிசேர் நல்விழி உமையாள்தன்
காதல் மிகுதரு மிளையோனே !
நேமிநல் நாதனின் மருகோனே !
நேர்மை தருமென தருள்நாதா !
நாமநீர் வேலைசூழ் உலகோர்தம்
நாடிய நன்மையாம் பெருமானே !

(காட்சி முடிவு)

## காட்சி - உ

**உறுப்பினர் :**—*நன்மொழிக் கூத்தர், பால்வண்ணன்.*

**இடம் :** *நெடுவழிச் சாலையில் ஒருபுறம்.*

**காலம் :** *முற்பகல்.*

[*நன்மொழிக் கூத்தரும், பால்வண்ணனும், திருமாவளவன் சிறையுற்றமைக்குப் பெரிதும் வருந்தி உரையாடல்.*]

**நன்மொழிக் கூத்தர்:**—*ஏ! குறிஞ்சி நிலக்கிழவ! இஃதென்ன வியப்பு! 'தான் பெறுதற்குற்ற ஒருமகன் இந்நிலவுலகைத் தனது ஒரு குடைக்கீழ் நிறுத்தி ஓம்ப வேண்டும்' எனும் பெருவிருப்பால் ஒரு முனிவன் மொழிந்தவாறு இயற்கை நிலையைக் கடந்து ஆ! என்ன துன்பம்! உரியபொழுதில் கருவுயிர்க்காது, தன் வயிற்றிலேயே நற்பொழுது கூடும்வரையில் அடக்கி இருந்து, பின்னர் பெற்றெடுக்கப்பெற்ற அவ்வழுந்தூர் வேள்மகளின் திருமகன், இன்று இவ்வாறு தாயோடிழிந்த—தாய மாக்களால் சிறைவாய்ப்பட்டு இடர்ப்படவேண்டும்? நாட்டின் நலத்தைப்பற்றி ஒரு சிறிதும் கருதாத, இத்தீத் தொழிலும் திறனில் செயலும் வாய்ந்த, இன்னவரது ஆட்சிக்கு எல்லை இல்லையா? பொதுமக்களாலே கட்டவிழ்க்கப்பெற்ற கழுமலத்து யானையும், நின் அருள்வாய் நின்றுதானே கருவூரையடைந்து யாங்கள் கைவிட்டு நின்ற திருமாவளவனைப் பற்றி வந்தது. அவ்வாறு இருந்தும், யாவும் புரியவல்ல நின்பேரருள் திறத்தின் பெருமையை மதியாது தானே, இன்று நாட்டிற்குரியவனை நள்ளிருட் சிறையில் அடைத்தனர். ஏ! தலைவ! இறைவனுய*

நினக்கும், நின் அன்பராய எமக்கும் இடர்புரியும் இத்தீய மாக்களை இன்னும் இறைமை இடத்தில் வைத்திருப்பதுதான் முறையோ! பெரும! நின் கருணையை அளக்க எவரால் ஆகும்.

[பால்வண்ணன் கூத்தரிடம் வருதல்.]

**பால்வண்ணன்** :—பெரியீர்! வணக்கம். உங்களை யான் எங்கெங்குத் தேடுவது? நல்ல வேளையாக இப் பொழுதாவது, இங்குக் கண்டேனே!

**நன்மொழிக் கூத்தர்** :—பால்வண்ணு! வாழ்க! வருக! ஏதேனும் புதுமையுண்டோ? நின்னைக் காணுது என் மனம் கவன்றுகொண்டேயிருந்தது.

**பால்வண்ணன்** :—ஐய! தாங்கள், இங்கு யாது கருதி நிற்கின்றீர்கள்? தங்களை நோக்கின் ஏதோ ஓர் அரிய கருத்துள் ஆழ்ந்திருப்பவரை யொத்துக் காணப் பெறுகின்றீர்களே?

**நன்மொழிக் கூத்தர்** :—ஆம் அரியதுதான்! நீ அறியாதது அன்று. நம் அரசிளங்கோமான் சிறைப்பட்ட நாள் தொட்டு என் உள்ளமும் உணர்வும் ஊறுபட்டுக் கொண்டே உள்ளன. என்றைக்கு அவன் நமது நாட்டின் நாயகனுக வருவானே, அன்றுதான் என் நெஞ்சமும் மகிழ்வுறும். நல்லது! நம் மன்னர் மகனைப்பற்றி யாதேனும் அறிவையோ? அறிந் தால் அருள்கூர்ந்து எனக்கு விளம்புவாய்.

**பால்வண்ணன்** :—அண்ணல்! யான் என் சொல்வேன்! சற்றுமுன் நம் ஒற்றன் ஒளிமணி என்பால் வந்து சென்றுன். நம் 'திருமாவளவனை இனிமேல் உயிருடன் வைக்கலாகாது' என்று தாயமாக்கள் தலைவன் கருதுகின்றுனும்.

**நன்மொழிக் கூத்தர்** :—அடா! தீவினையாளா! நினக்குக் கேடு விரைவில் வந்துறுதா? என்னே! கொடுமை! கொடுமை!

**பால் வண்ணன்** :—யானை கொணர்ந்தபொழுதே கொன்று விடக் கருதினனும். பொதுமக்கள் தலைவரும் பிறமக்களும் கூடிச்செய்த செயலை மறுத்தால் தனக்கு நிலையின்மை விரைவில் வந்துறும் என்ற கருத்து அவன் உள்ளத்தில் எழுந்ததாம். ஆதலால் இத்துணை நாள் காத்திருந்து மக்கள் மனத்தை மாற்றியுள்ளானும். எனினும், கொன்றுவிடக் கருதினல் அச்சம் தலைக்கொள்கின்றதாம். ஆதலால் நம் மன்னன் மகன் அடைபட்டிருக்கும் சிறைச் சாலையைத் தீயிட்டுப் பொசுக்கிவிட்டால் மக்கள் யாவரும் தாய மக்கள் தலைவனிடத்து ஐயங் கொள்ளாராய் விதிவலியால் மன்னன்மகன் தீவாய்ப் பட்டு இறந்தானென்று கருதிவிடுவார்களாம்.

**நன்மொழிக் கூத்தர்** —அடா! கெடுவாய். என்னென்ன கருதினய்? என்ன கொடுஞ் செயல்; ஆ, எத்தகைய இரக்கமற்ற நினைவு! ஏ, முருகா, களைகண் அற்றவரின் கரையே! நீ இவ்வாறு எம்மை வருத்த லாகுமா? இத்தகைய தீ நெறியாளரின் வாழ்க் கையைத்தான் இன்னும் நீட்டலாகுமா?

(பாடுதல்)

“மாற்றறியாத செழும்பசும் பொன்னே!
மாண்பிலாத் தாயத்தார் மதியற்ற முதல்வன்
கூற்றறி யாதகொ டுஞ்செய லுற்று,
கொற்றவ னின்மகன் அற்றிய நினைந்தே,
எற்றறி யாததீ யெரியழல் கொண்டு
எம்மிறை மகன்சிறை எரியூட்டும் போது
சாற்றறி யாதவோர் தனிப்பெருந் துணையே
சார்ந்து புரந்திடும் சேர்ந்தவான் மணியே”

ஏ ! நாயகா ! நின்னையல்லாது எங்கட்கு உற்றுருற வினர் எவருளர்? நின் பெருந்தகைமையால் எங்கள் இறைவன் மகனை இடரினின்றும் அகற்றுவாய்.

**பால்வண்ணன் :**—பெரியீர் ! நாம் இங்கு நிற்றல் ஆகாது. ஒற்றன் ஒளிமணியும் இதுபோது விரைந்து சென்று, இரும்பிடர்த் தலையாரிடம் இவை யாவற்றையும் உணர்த்தியிருப்பன். ஆதலால் நாமும் ஆவன கொண்டு அவருடன் துணை நின்று நம் இறைமகனை மீட்க வேண்டும்.

**நன்மொழிக் கூத்தர் :**—அவ்வாறே செய்வோம்; செல்வோம் வருக. ஏ! முருக! ஏரகத்துநாதா! நீயே எங்கட்குத் துணை நிற்பாய்.

[இருவரும் செல்லுதல்.]

(காட்சி முடிவு)

## காட்சி - ந

**உறுப்பினர் :**—காவலன், திருமாவளவன், இரும்பிடர்த் தலையார்.

**இடம் :**—உறையூர்ச் சிறைக்கோட்டம்.

**காலம் :**—நள்ளிரவு.

[இரும்பிடர்த்தலையார், தன் மருகன் திருமாவளவனைச்சிறையினின்றும் மீட்டல்]

[காவலன் உலாவிக்கொண்டே கொட்டாவி விடுதல்.]

**காவலன் :**—ஆ............வ் முருகா ! வெளியே சென்ற தப்பிலிப் பயல் இன்னும் வரவில்லை ! எவ்வளவு நேரம் காவல் காத்திருப்பது ? இனி, நான் வீடு செல்லவேண்டும். பின்னர் உணவு கொள்ளல் வேண்டும். என்ன ! என்னைப்பற்றி ஏதேனும்

